*Kumaraṉ*

*Āram 13, muttu 33*

*April 23, 1936*

Record no. 313

REG. NO. M. 1823. 20 பக்கங்கள். KUMARAN WEEKLY

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0

ஸிலோன், பர்மா வருஷம் ஒன்றுக்கு ரூ. 6-0-0

மலாய் முதலிய வெளிநாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 7-0-0

# குமரன்

விளம்பரம்.

கோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்ச் ஒன்றுக்கு ரூ. 2-0-0.

வியாபார சம்பந்தமானது ரூ. 0-12-0

ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கெழுதவும்.

(மாதப்பதிப்பும் சேர்ந்தது.)

வியாழன் தோறும் வெளிவரும்.

PUBLISHED EVERY THURSDAY.

ஆசிரியர்:— சோ. முருகப்பா.

ஆரம் 13. காரைக்குடி, தாது-ஹூ சித்திரை-மீ 11உ (23—4—36.) முத்து 33.

# ஆயிரக்கணக்கான ஆசை நாயகிகள்

## துருக்கி சுல்தானின் அந்தப்புர நிலைமை

## பலதேசப் பெண்களின் காதல் தொடர்பு

பல நூற்றுண்டுகளாகத் துருக்கி சுல்தான்களைப்பற்றியும் அவர்களுடைய அந்தப்புரங்களைப்பற்றியும் உலகத்திற்கு ஒன்றும் தெரியாதிருந்தது. சுல்தான்களையும் அவர்களுடைய அந்தப் புரங்களையும் யாரும் அணுக முடியாமலிருந்தது. ஆனல் அவ்வக்காலங்களில் பல விஷயங்கள் வெளிவந்திருக்கின்றன. அவைகளை யெல்லாம் ஒன்ருகச் சேர்த்து வைத்துப்பார்த்தால், துருக்கியின் புரட்சிக் காலத்திற்கு முன்பு சுல்தான்களுடைய இல்வாழ்க்கையின் இயல்பு எப்படி யிருந்தது என்பதை நாம் ஒருவாறு யூகித்துக்கொள்ள முடியும். இவ்விஷயத்தைப்பற்றி "மெர்கூரி-டி பிரான்ஸ்" என்னும் பத்திரிகையில் ஒரு அறிஞர் பின்வருமாறு எழுதுகிருர்:—

பழைய காலத்து அந்தப்புரம் பிரயாணிகளுக்குத் திறந்துவைக்கப்பட்டு வெகு காலமாய் விட்டது. அதன் சுற்றுலே வாயில்கள் கனத்த சுவர்களுக்கூடே செல்லுகின்றன. அவ்விடங்களில் தான் சிரச்சேதம் செய்யப்பட்டவர்களின் ரத்தந் தோய்ந்த தலைகள் தொங்கவிடப்பட்டன. மரஞ் செடிகள் அடர்ந்த பெரிய நந்தவனங்களுக்குள் ஒரு நூறு பொசிவு தடாகங்களுடன்வெகு அழகாய்ச்சித்தரிக்கப்பட்டுத் தோன்றும் வெண்மையான பளிங்குக்கல் மாளிகைகள் பலவும் ஒருங்கே நம் கண் முன்பு தோன்ருகின்றன. நகரின் மூக்கியமான இப்பகுதிக்குளவ்வித அமைப்புத் திட்டமும் கிடையாது. காலஞ்சென்ற 25 சுல்தான்களும் தம் தம் மனம்போனபடிக்கு அதை அலங்கரித்து விதம் விதமாய்க் கட்டிவைத்தார்கள்.

அந்தப்புரத்தின் நிர்வாகம் விவாகமான ஒரு மூதாட்டியிடம் இருந்திருக்கிறது. பொக்கிஷமும் அவ்வயது சென்ற பெருமாட்டியிடமே இருந்து வந்திருக்கிறது. அம்மூதாட்டியின் நிர்வாகம் சுல்தானுடைய அன்னையின் மேற்பார்வையில் நடந்து வந்திருக்கிறது. அந்தப்புரத்தில் ராஜகுமாரிகளுக்குச் சொந்தமான ராஜகுமாரனுடைய பிரியத்திற்குரிய அணங்குகள் பலர் இருப்பார்கள். சம்பளம் பெறும் பணிப்பெண்கள் அநேகர் இருப்பர். அப்பணிப்பெண்களில் சுல்தானுடைய விசேஷ அன்பைப் பெற்றவர்கள், அவருடைய சயன அறைச் செல்விகளாயிருப்பர். சுல்தானுடைய மனைவியின் சேவகத்திற்கென்று சுமார் 30 பெண்களடங்கிய கோஷ்டிகள் பல விருக்கும். சுல்தானுடைய பட்டமகஷியின் குழந்தைகள் பல அந்தப்புரத்தில் இருக்கும். சுல்தான்களுக்கு இன்பமூட்டுவதற்குப் பயிற்சிசெய்விக்கப்பட்ட பெண்கள் பலர் இருப்பர். அப்பெண்கள் தங்கள் தங்கள் ஆற்றல்களுக்கேற்ப காதல் விஷயங்களிலும், இல்வாழ்க்கை நடிப்புகளிலும் சுல்தானுக்கு இன்பமளிக்கத் தேர்ச்சி பெற்றவர்கள். அவர்களும் அந்தப்புரத்தில் ஏராளமாக இருப்பர். மற்றும் தேகத்தால் ஊழியஞ் செய்யும் அடிமைப் பெண்கள் பலரும் அங்கிருப்பர். சுல்தான் மூன்ரும் மூராட் காலத்தில், அவருடைய அந்தப்புரத்தில் 3000 பெண்கள் வரையில் இருந்திருப்பதாகத் தெரிகிறது. நூறு ஆசை நாயகிகளை மட்டும் உடைய சுல்தான்கள் மிகக் குறைந்த பெண்ணசை யுடையவர்கள் என்று கருதப்பட்டிருந்தார்கள். அந்தப்புர நிர்வாகத்தில் விசேஷ ஒழுங்கும் கண்டிப்பும் கடுமையான மேற்பார்வையுமிருந்து வந்தன. காதலிகளுக்குள் தோன்றும் போட்டி, பொருமை, வெறுப்பு முதலியவைகளை அப்படியே அமிழ்த்தி நசுக்கி விடுவது வழக்கம்.

அந்தப்புரப் பெண்கள் தீங்கள் தங்கள் மனே எழுச்சிகளின் இயல்புகளை ஏதோ சில சமிக்கைகளால் மட்டுமே காட்டிக்கொள்வார்கள். அத்தகைய சமிக்கைகளினுலும் அவர்களுக்குள் மனஸ்தாபங்கள் ஏற்படுவதுண்டு.

அந்தப்புரப் பெண்கள் ஒருவரோடொருவர் பலமாய்ச் சண்டையிட்டுக் கொள்வதுண்டு. அடிபிடி சண்டையும் பெண்களுக்குள் நிகழ்வதுண்டு. அதனுல் அவர்களுக்குக் காயங்களும் ஏற்பட்டிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட சந்தர்ப்பங்கள் அபூர்வம். அவ்வளவு தூரத்திற்குப் பகைமை வளருவதற்கு முன்பே அதை அந்தப்புர நிர்வாகிகள் ஒடுக்கிவிடுவார்கள். சம்பந்தப்பட்டவர்களை இரக்கமின்றி சுல்தான் தண்டித்து விடுவதுண்டு. எப்போதோ ஒரு சமயம்தான் சுல்தானே அல்லது பட்டமகிஷியோ காதலின்பம் விழைவது வழக்கம். அப்போது அது ஒரு பெரிய ஞாபகார்த்த சம்பவமாகவிருக்குமாம்.

சுல்தானுடைய அந்தப்புரத்தில் நூற்றுக்கணக்கான வருஷங்களாக அநேக தேசப் பெண் அடிமைகள் சேர்க்கப்பட்டு வந்தனர். ஜியார்ஜியா, ஆர்மேனியா, சிரியா முதலிய நாட்டுப் பெண்கள் அங்கு குழுமியிருந்தனர் என்ருலும் அவர்களிலிருந்து எந்த பட்டமகிஷியும் தோன்றியதில்லை. ஆனல் சில மேல்நாட்டுப் பெண்கள் சுல்தான் அந்தப்புரத்தில் ஆதிக்கம் செலுத்திவந்திருக்கிருர்கள் என்றுமட்டும் தெரிகிறது. அவர்களில் ருஷிய ரரக்ஸிலேன், வெனிஷியசாபி, கிரேக்க கோசம் என்னும் மாதரசிகள் முக்கியமானவர்கள். அந்தப்புரப் பயிற்சி முறைகளையும், பயிற்சி பெறும் பெண்களையும், பணிப்பெண்கள் வாழ்க்கைமுறையையும், அவர்களுடைய பொழுதுபோக்குகளையும் நித்திரையையும் வயது முதிர்ந்த பெண் தலைவிகள் மேற்பார்வைசெய்து வருவார்கள். பட்டமகிஷிகள் கணவருடைய அன்னைமார்களால் ஏதோ சிலகுறிப்பிட்ட நாட்களில்தான் சிநேகிதர்களைக் கண்டுபேச அநுமதிக்கப் படுவர். அவர்கள் அநுமதியின்றி உலாவப் போதலுங் கூடாது. ஏதோ சில வருஷோற்சவ காலங்களில் ஏதோ சில சடங்குகளின் நிமித்தமாக ஏதேனும் சில தமாஷ்கள் நடைபெறும். அப்போதுதான் அந்தப்புர ஸ்திரீகளுக்கு ஒரு விநோத பொழுது போக்குக்கு ஒரு சந்தர்ப்பம் ஏற்படும். அதற்கும் அந்தப்புர ஸ்திரீகளில் யாவரும் அநுமதிக்கப்படுவதில்லை. அக்களியாட்டங்களைக் காண ஒரு சில ஸ்திரீகள்தான் வேறிடம் செல்ல அநுமதிக்கப்படுவது

(2-ம் பக்கம் பார்க்க)

## விகடத் துணுக்குகள்.

(கொழும்பு எம். ஆர். சேதுராமன் திரட்டியது.)

கோபாலன்:—போலீசார் உன் வீட்டைச் சோதனை போட்டபோது என்ன கிடைத்தது?

கோவிந்தன்:—எங்கள் வீட்டு வேலைக்காரி ஒளித்து வைத்திருந்த மற்றொரு சாவி. சென்றவாரம் காணமற்போன என்னுடைய சட்டைப் பொத்தான்கள் முதலியவைகள் அகப்பட்டன.

* * *

வாலிபன்:—ஒரு மூடன் மிகவும் பணக்காரனாயிருந்தால் நீ அதற்காக அவனைக் கல்யாணம் செய்துகொள்ளுவாயா?

யுவதி:—உங்களுக்கு எவ்வளவு ஐவேஜியிருக்கிறது.

* * *

கண்ணப்பன்:—ஞாபக மறதிக்கு வைத்தியம் செய்துகொள்ள டாக்டரிடம் போயிருந்தாயோ? அவர் என்ன சொன்னர்?

கிருஷ்ணன்:—சில மாத்திரைகளைக் கொடுத்துச் சாப்பிடச் சொன்னர்.

கண்ணப்பன்:—ஏதாவது பலனேற்பட்டதா?

கிருஷ்ணன்:—நிச்சயமாகக் கூற முடியாது. ஏனென்ருல் அந்த மாத்திரைகளைச் சாப்பிட மறந்துவிட்டேன்.

* * *

மனோஹரன்:—டெலிபோனில் யாரோ கூப்பிடுகிருர்களாமே! யாராயிருக்கலாம்?

அவன் மனைவி:—யாராயிருந்தால் என்ன? அடுத்த வாரம் பணம் அனுப்புவதாகச் சொல்லிவிடுகிறேனே.

* * *

திடீரென்று பணக்காரனகிவிட்ட ஒரு மனிதன் தன்னுடைய மோட்டாரில் ஏறி உட்கார்ந்து கொண்டான்.

மோட்டார் ஓட்டி:—எஜமானே! எங்கே போகப் போகிறீர்கள்?

எஜமான்:—நான் போகுமிடத்தைப் பற்றிக் கேட்க உனக்கு என்ன தைரியம்?

### பெரிய ஹரிஜனர்

டில்லி ஹரிஜன் காலனியில் காந்திஜி வசித்துவந்தார். ஏராளமானவர்கள் வந்து பார்த்துவிட்டுச் சென்றனர். அதில் சிலருக்குப் பெருத்த சந்தேகமேற்பட்டது. இதை யெப்படி ஹரிஜன காலனி என்று கூறமுடியும்? எங்களால் ஒரு ஹரிஜனரைக்கூட இங்கு காணமுடியவில்லையே என்றனர் ஒரு சிலர்.

இதைக் கேட்டுக்கொண்டிருந்தார் சர்தார் படேல். "ஏன் அப்படிக் கூறுகிறீர்கள். இங்கே மூன்று ஹரிஜனங்கள் இருக்கின்றனர். தாக்கர் ஒருவர், மால்கானி ஒருவர், எல்லாரையும்விட பெரிய ஹரிஜனான காந்திஜி ஒருவர்." என்று கூறியதும் எல்லோரும் சிரித்தனராம்.

(1ம் பக்கத் தொடர்ச்சி)

வழக்கம். அப்பெண்கள் ஏட்ரிய நோப்பிளுக்காவது அல்லது ஸ்கூடாரி என்னுமிடத்திற்காவது அல்லது வேறு ஏதேனும் ஒரு ஸ்தலத்திலுள்ள அந்தப்புறத்திற்காவது அழைத்துச் செல்லப்படுவர். ஏதேனும் திருவிழாக் காலங்களில், விசேஷ தீபாலங்கார வேடிக்கைகளையும், வாண வேடிக்கைகளையும் அந்தப்புர ஸ்திரீகள் ஜன்னல்களின் பின்னல் தட்டி துவாரங்களின் வழியாய்ப் பார்க்க அநுமதிக்கப்படுவர். எப்போதாவது ஒருசமயம் மாறுவேஷக்கூத்து நடைபெறுவதுண்டு. அந்தக் கூத்து அந்தப்புர பெண்களுக்குள்ளேயே நடைபெறும். அப்போது அங்குள்ள ஸ்திரீகளெல்லாம் சுல்தானை மகிழ்விக்கத்தக்க விகட விநோத உடைகளிலும் வேஷங்களிலும் தோன்றி நடிப்பர்.

# இத்தாலி—அபிஸீனிய யுத்தம்

## தலைநகர் வீழ்ந்துவிடும்

### மன்னர் இறக்கவில்லை

### இறுதிவரை போராட மன்னர் தயாராகிருர்

அடிஸ் பாபா ஏப்ரல் 19—

இத்தாலியர் ஜிஜிகாவைப் பிடித்துக் கொண்டு விட்டதாகச் செய்தி கிடைத்திருக்கிறது.

#### ஹாரார்

ஹாரார் நகரம் இத்தாலியரால் பிடிக்கப்பட்டு விட்டதாகப் பாதி உத்தியோக தோரணையில் அறிவிக்கப்படுகிறது. ஹாரார் மார்க்கத்தை ராஸ் நாஸிபுவின் படைகள் காத்துக்கொண்டிருந்தன. அவற்றுடன் 2½ நாட்கள் கடுமையான யுத்தம் நடந்தது. இத்தாலியர் சார்பில் லிபியப் படையினர் போர் செய்தார்கள். ராஸ் நாஸிபுவின் படைகள் தோற்றுப்போயின. அபிஸீனிய தளகர்த்தரான டெட்ஜஸ்மாச் அபே பேடாம் உள்பட மூவாயிரம் அபிஸீனியர் இறந்தனர். இத்தாலியர் பக்கமும் பலத்த சேதம் ஏற்பட்டது.

எப்ரல் 14-ந்தேதியன்று கிரேஸியானியின் தலைமையிலுள்ள இத்தாலிய சைன்னியங்கள் போரைத் துவக்கின. ஹாராரில் இத்தாலியர் பெரும்போர் செய்ததாக வெளியான செய்தி ஊர்ஜிதம் செய்யப்படுகிறது.

#### தலைநகரில் அச்சம்

இத்தாலியர் புகக்கூடுமென்ற அச்சம் தலைநகரில் பலமாகப் பரவியிருக்கிறது. பெல்ஜிய அதிகாரிகளும் மற்ற வெளி நாட்டாரும் நாளை இங்கிருந்து ஜிபௌடிக்குப் புறப்படத் தயாராகிவிட்டனர். இத்தாலியர் படையெடுத்தால் ஜெர்மன் பிரஜைகளெல்லாம் வெளியேறிவிட வேண்டுமென்று ஜர்மன் சர்க்கார் தெரிவித்திருக்கிருர்கள்.

ஒரு நொடியில் தலைநகரில் புகுவதற்காக வடமுனையில் இத்தாலியர் முஸ்தீபுகளைச் செய்து வருகின்றனர். டெஸ்லியில் இத்தாலியர் தங்கள் நிலையை ஸ்திரம் செய்துகொள்ள முயல்கின்றனர். தெற்கு முனையில் மழை பலமாக இருக்கின்றது. தாக்கா மாரோடஸ்காவில் பெருத்த சண்டைகள் நடைபெறுவதாக ரோம் செய்திகள் கூறுகின்றன,

நவீன முறையில் ஹிண்டன் பர்க் மாதிரி அபிஸீனியப் படைகளை ராஸ் நாஸிபுவும் வாக்கியஷாவும் அணிவகுத்து நிற்கச் செய்து வருகிருர்கள். இவர்களுக்குச் சகாயமாக சைந்நியங்களும்வைக்கப்படுகின்றன. ஜிஜிகாவுக்கும் ஹாராருக்கும் முன்பாக இத்தகைய படைகள் வைக்கப்பட்டிருக்கின்றது. பிரிட்டிஷ் சோமாலிலந்து ரஸ்தாவைப் பாதுகாப்பது இவ்வேற்பாட்டின் நோக்கம். இந்த ரஸ்தா வழியாகத்தான் அபிஸீனியாவுக்கு ஆயுதங்கள் வந்துகொண்டிருக்கின்றன. தெற்கேயிருந்து இத்தாலியர் முன்னேருவண்ணம் தடுப்பதற்காக டாங்கிகளைச் சுடும் துப்பாக்கிகளை அபிஸீனியர் சமீபத்தில் வாங்கினர்கள். வடக்கேயுள்ள இத்தாலியப்படை பின்னல் வந்து தாக்குமோ என்பதுதான் அபிஸீனியரின் அச்சம்.

#### மன்னர் இறக்கவில்லை

அபிஸீனிய மன்னர் இறந்துவிட்டதாகவும் அவர் சிம்மாசனத்தைத் துறப்பாரென்றும் இளவரசரே சிம்மாசன மேறப்பாரென்றும் இத்தாலியில் பொய்க்கதைகளைக் கட்டிவிட்டிருக்கின்றனர். அபிஸீனியச் சக்கரவர்த்தியிடமிருந்து நாள்தோறும் செய்திகள் வந்துகொண்டிருக்கின்றன.

இத்தாலிய சுதேசப்படைகள் புகுந்தவுடன் இளவரசர் தம் சைன்னியங்களுடன் பின்தாங்கி மலைகளில் ஏறிக்கொண்டதாக ஒரு ஆங்கிலேயர் கூறுகிருர்.

#### தலைநகர் மாற்றம்

இத்தாலியர் தலைநகரில் புகக்கூடுமென்று தோன்றுவதால் தலைநகரை மேற்குப் பிரதேசத்திலுள்ள ஓரிடத்துக்கு மாற்றுவது பற்றி சர்க்கார் ஆலோசனை செய்து வருகிருர்கள்.

17-ந் உ காலையில் இரண்டு இத்தாலியவிமானங்கள் தலைநகர்மீது பறந்தன. அவற்றிலிருந்து வீசப்பட்ட சில உருளைகள் கீழே விழுந்து வெடித்தன. இத்தாலியக் கொடியின் மூவர்ணங்களாகிய சிவப்பு, பச்சை, வெள்ளைப் புகைகள் கிளம்பின. ஜனங்கள் முன்பு போல இப்பொழுது அச்சங்கொள்ளவில்லை.

#### பிரிட்டனின் பயமுறுத்தல்

பிரிட்டிஷ் சர்க்கார் தங்கள் அறிக்கையொன்றில் குறிப்பிட்டிருப்பதாவது:—

இத்தாலியர் கூற்றையும் செஞ்சிலுவைகோஷ்டியதிகாரிகள் அனுப்பியஅறிக்கைகளையும் சர்க்கார் பரிசிலனைசெய்து பார்த்தார்கள். பிரிட்டிஷ் செஞ்சிலுவைக் கோஷ்டியின் போக்கு வடக்கு முனையில் இத்தாலிய அதிகாரிகளுக்கு அவ்வப்போது அறிவிக்கப்பட்டுவந்தது செஞ்சிலுவைச் சின்னங்களும் பிரபலமாகக் கட்டப்பட்டிருந்தன. மார்ச் 3, 4-ந் தேதிகளில் செஞ்சிலுவைக் கோஷ்டிகள் வேண்டுமென்றே இத்தாலியரால் தாக்கப்பட்டன. தாங்கள் கூறும் செய்கைக்கு இத்தாலியர் கூறும் சமாதானம் ஏற்றுக்கொள்ளத் தகுந்ததாக இல்லை. அவர்கள் கூறும் காரணமும் சரியானதல்ல. இராணுவ அதிகாரிகளுக்கு இத்தாலிய சர்க்கார் தெளிவான உத்தரவுகளைக் கொடுத்து இத்தகைய சம்பவங்கள் நேராமல் பார்த்துக்கொள்ளவேண்டும். உரிய சமயத்தில் எதியோபியாவில் தங்களுக்கேற்பட்ட கஷ்ட நஷ்டங்களுக்கு பிரிட்டிஷார் ஈடுகோருவார்கள்.

#### சமரசம் "கயா"

ஜினிவா சமரச முயற்சிகள் பலிக்கவில்லை யென்று சிஞேர் மடாரிகோவும் மிஸ்டர் ஆவனுசெம் தயாரித்த யாதாஸ்தைப் பதின்மூவர் கமிட்டியார் ஏற்றுக்கொண்டு விட்டார்கள். விஷக்காற்றுப் பிரயோகத்தைப் பற்றி விசாரணை செய்த நிபுணர் கமிட்டி யாதாஸ்தும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. இத்தாலியரைக் குறித்து அபிஸீனியர் செய்துகொண்ட புகாரும் யாதாஸ்தில் அடங்கியிருக்கிறது.

இத்தாலியப்பிரதிநிதியான அலாய்ஸி பிரபு ஏப்ரல் 20உ யன்று ஜினிவாவில் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

அபிஸீனியர் படைகளை இறக்கும் இடங்கள், தலைநகரம், ஆயுதங்கள் வரும் மார்க்கத்திலுள்ள எல்லைப்புறங்கள் முதலியவற்றை இத்தாலியர் கைக்கு விட்டாலன்றி யுத்தத்தை நிறுத்திக்கொள்ள இத்தாலி இசையாது. இந்தக் கோரிக்கைப்படி அபிஸீயா முழுதையும் விட்டு விடவேண்டியதுதான்.

விஷக்காற்றுப்புகைப் பிரயோகத்தைப்பற்றி விசாரணை செய்ய பதின்மூவர் கமிட்டிக்கு அதிகாரம் கிடையாது. இவ்வளவு பெரிய பிரச்னையைத் தீர ஆலோசனை செய்யாமல் தீர்க்க முயலுவதும் கூடாது.

#### சக்கிரவர்த்தி உறுதி

இத்தாலிக்குப் பணியும் உத்தேசம் மட்டும் சக்கிரவர்த்திக்குச் சிறிதுகூடக் கிடையாது. மிகச் சிறந்த சிப்பாய்களுடன் சக்கிரவர்த்தி கடைசிவரை போராடுவார். தலைநகர் வீழ்ந்தபோதிலும் அவர் லட்சியம் செய்யப்போவதில்லை. அவரது சைன்னியத்தில்சேருவதற்காக சிப்பாய்களெல்லாம் வடக்கே போய்க்கொண்டிருக்கின்றனர். சக்கரவர்த்தி இருக்குமிடம் இன்னும் இரகசியமாகத்தான் இருக்கிறது.

இன்னும் அபிஸீனியருக்கு ஒன்றும் முழுகிப் போய்விடவில்லை. இடம் பார்த்து எதிரிகளைத் தாக்கினல் இத்தாலியர் முன்னேற்றத்தைத் தடை செய்து விடலாம். இத்தாலி சேனைக்குப் பின்னே யிருக்கும் ரஸ்தாக்களை எந்த நிமிஷத்திலும் மழை வந்து அழித்துவிடலாம். உணவுசப்ளைஇதனல் தடைப்படும். படாக்ளியோ இவ்விஷயத்தில் விமானங்களையே நம்பியிருக்குருர்.

விஷக்காற்றுப் பைகளையும் வெடிகுண்டுகளையும் போட்டதாலே இத்தாலிய முன்னேற்றம் சாத்தியமாயிற்று.

சீக்கிரம் மழைகாலம் ஆரம்பித்துவிடும். நோய்களும் பாவத்துவங்கும். அபிஸீனியரின் கொரில்லா யுத்தமுறைக்கு இதுவே ஏற்றகாலம்.

#### மர்மஸ்தானத்தை மறைக்க

#### 8 அங்குல இலையே போதுமானது

நியூயார்க்கில் சமீபத்தில் நடைபெற்ற நாடகமொன்றில் ஏவாளாக நடித்த ஒரு மாது 8 அங்குல அகலமுள்ள ஆத்தி இலையால் தன்னுடைய மர்மஸ்தானத்தை மாத்திரம் மறைத்துக்கொண்டு மேடையின்மீது வந்தாளாம். இத்தகைய கோலத்துடன் மேடையின் மீது வந்த அம்மாதின் மீது போலீசார் நடவடிக்கை எடுத்துக்கொண்டனர். இவ்வழக்கை விசாரித்த நியூயார்க் மாஜிஸ்டிரேட், ஒருவர் மானத்தை மறைத்துக்கொள்ள 8 அங்குல இலை போதுமெனத் தீர்ப்புக்கூறினர்.





# புதுவயலில் ஆண்டு விழா

## திரு. டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்கள் தலைமை வகித்தார்கள்.

(நமது நிருபர்)

குறிப்பிட்டபடி சித்திரைமீ 7உ ஞாயிற்றுக்கிழமை யன்று காலை 9 மணிக்கு புதுவயல் சரஸ்வதி சங்கத்தின் பதினன்காவது ஆண்டுவிழாவும், ஸ்ரீ சரஸ்வதி வித்தியாசாலையின் 4-வது ஆண்டுவிழாவும் மிகுந்த சிறப்புடன் ஆரம்பமாயிற்று. நகரின் முக்கிய தெருக்களில் இனிய வரவேற்பு வாசகங்கள் அடங்கிய வளைவுகள் போடப்பட்டிருந்தன. ஆண்டுவிழா மண்டபமாகிய திரு. பெரி. வீர. ராம. அவர்கள் இல்லமானது அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. ஏராளமான தேசியப்படங்கள், கொடிகள், நீதிவாக்கியங்கள் முதலியன மண்டபம் முழுதும் காணப்பட்டன. உள்ளூர் வெளியூர்களிலிருந்து ஆண்களும் பெண்களுமாக சுமார் 1200 பேர் வரை விஜயஞ்செய்திருந்தது குறிப்பிடத்தக்கது.

ஆண்டுவிழாத் தலைவர் திருவாளர் டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்கட்கு திரு. பெரி. வீர. ராம. பெரியணன் செட்டியாரவர்கள் மாலையணிவித்து சாரணர் அணிவகுப்புடன் மேளவாத்தியங்களுடனும் நகர மண்டபத்திலிருந்து விழா மண்டபத்திற்கு அழைத்து வந்தார்கள்.

மாணவிகள் கடவுள் வாழ்த்துப்பாட விழா ஆரம்பமாயிற்று. திரு. எ. பெரி. வீரப்ப செட்டியாரவர்கள் தலைவருக்கு வரவேற்புத்தாள் வாசித்தளித்தார்கள். காரியதரிசி திருவாளர் சா. சிதம்பரம் அவர்கள் ஆண்டறிக்கை வாசிக்க அறிக்கையின் அச்சுப்பிரதிகள் யாவருக்கும் வழங்கப்பட்டன.

பின்பு தலைவர் திரு. டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்கள் முகவுரையாகப் பேசியதன் சாரம் வருமாறு:—

இப்பள்ளிக்கூடத்தைப்பற்றி நான் முன்பு கேள்விப்பட்டதுண்டு. என்ருலும் நான் இங்குவந்து பார்த்தபொழுது நான் கேள்விப்பட்டதைவிட அதிகமாக அறிந்து மகிழ்கின்றேன். பல பிரபலஸ்தர்கள் இப்பள்ளிக்கூடத்தைப்பற்றி விழுமிய அபிப்பிராயம் அளித்திருக்கின்றனர் என்பதைக்கண்டு நான் மிகுதியும் சந்தோஷப்பட்டேன். பள்ளிக்கூடம் சிலவற்றிலபொருளாதார வசதிக்குறைவின் காரணமாக சர்க்கார் உதவியை எதிர்பார்க்கவேண்டிய நிலையிலிருக்கின்றது. ஆனல் இப்பள்ளிக்கூடம் அத்தகைய நிலையில் இல்லை யென்பதையும், இந்த ஊர் பொதுஜனங்களின் பேருதவியினலேயே தனித்தியங்குவதாகவும் அறிந்து மிகுதியும் களிப்படைந்தேன். மற்றும் இங்கு சென்ற ஆண்டில் பலவகையான விழாக்கள் கொண்டாடப்பட்டிருப்பதாக அறிகிறேன். இத்தகைய கொண்டாட்டங்கள் இதுபோன்ற சர்க்கார் தொடர்பற்ற பள்ளிக்கூடங்களில்தான் கொண்டாடமுடியும். சர்க்கார் பள்ளிக்கூடங்களில் இருக்கும் நிர்ப்பந்தங்கள் இத்தகைய கலையுணர்ச்சியைப் பாழ்படுத்திவிடுகிறது ஆகையால் நீங்கள் எந்தக் காரணங்கொண்டும் இப்பள்ளிக்கூட சம்பந்தமாக சர்க்காரின் எத்தகைய உதவியையும் எதிர்பார்க்கக் கூடாதென்று கூற விரும்புகிறேன். மேலும் நமது நாட்டு சர்வகலாசாலை போன்ற கலாநிலையங்கள் கலைகளுக்கு வளர்ப்பிடமாக இருக்கவில்லை. அவை வெறும் மேனட்டு ஒழுக்கங்களையும் நாகரிகத்தையும் வளர்ப்பதற்காகவே ஏற்பட்டன. நமக்கு வேண்டிய கொள்கைகளும் நோக்கங்களும் ஒன்றுமே அப்பள்ளிகளில் கிடையா. ஆகவே இத்தகைய கலா உணர்ச்சியும், வாழ்க்கை நலனும் நிறைந்த கல்விச்சாலைகள் பெருகவேண்டு மென்பதே எனது நோக்கம். இத்தகைய பள்ளிக்கூடங்களை வளர்க்க எத்தகைய உதவியையும் செய்யப் பொதுஜனங்கள் கடமைப்பட்டிருக்கிருர்கள்.

பின்பு மாணவர்களின் பாட்டு பேச்சு, நடிப்பு முதலியன நடைபெற்றன. வந்திருந்த ஜனங்களின் உள்ளம் முழுதையும் சரஸ்வதி வித்தியாசாலை மாணவர்கள் ஒவ்வொரு துறையிலும் கொள்ளை கொண்டுவிட்டார்கள். வைதிக சம்பாஷணை யொன்று இதில் முக்கியமானது. சாமா சாஸ்திரியாக நடித்த சிறுவனின் திறமை எல்லாராலும் பாராட்டப் பெற்றது. காந்தி பிரசங்கம் செய்த வீர. பழனியப்பன், "இல்லவே இல்லை" என்ற சம்பாஷணை நடத்திய பெரி. சிதம்பரம் ஆகிய சிறுகுழந்தைகளின் நடிப்பு ஜனங்களின் மனதைக் கொள்ளை கொண்டு விட்டன. தலைவர் திரு. சிதம்பரநாத முதலியாரவர்கள் "பாவம்" ததும்பப் பேசியும் நடித்தும், ஜனங்களை மகிழ்வித்த மேற்கூறிய குழந்தைகளை விசேஷமாகப் பாராட்டிப் பேசினர்.

பின்னர் பண்டிதர் அ. மு. சரவண முதலியாரவர்கள் சேக்கிழார் கூறிய சேயிழையாருட் சிலர் என்பது குறித்து ஒரு அரிய சொற்பொழிவாற்றினர்கள். அதன் சாரம் வருமாறு:—

சற்று முன்பு நடந்த ஒரு வைதீக சம்பாஷணையைக் கேட்டு நீங்கள் ரசித்தீர்கள். தாழ்த்தப்பட்டவர்கள் என்று கருதப்படும் இனத்தினராக வேஷம்தரித்துவந்த சிறுவர்கள் பார்ப்பனனக வந்தவனை வணங்க மறுத்தது நியாயந்தான். ஆனல் அவர்கள் சாமி என்று அழைத்தது பிசகு. சாமி என்ற சொல்லே ஒழிந்துவிடவேண்டும். பார்ப்பனர்களின் அகம்பாவம் ஒழியவேண்டுமானல் சாமி என்று அவர்களை அழைப்பதை அறவே நிறுத்திவிடவேண்டும். காலநிலைக்கேற்ப நாம் நடந்துகொள்ளுதல் அவசியம். பார்ப்பனர்களைக் காரணமின்றியும் வீணகவும் நாம் பெருமைபடுத்திவிடுதல் கூடாது. சேக்கிழார் இந்த விஷயத்திலே மிகுந்த ஜாக்கிரதையாக இருந்திருக்கிருர் என்பதை இந்த சந்தர்ப்பத்தில் உங்களுக்கு எடுத்துக்காட்ட விரும்புகிறேன். பெரிய புராணத்திலே 13 பேர் பார்ப்பன நாயன்மார்கள் என்பதை ஞாபகப்படுத்த விரும்புகிறேன். இந்த பதின்மூன்று பேரைப்பற்றிய எந்த இடத்திலும் இவர்களை "ஐயர்" என்று சேக்கிழார் கூறவேஇல்லை. மறந்தாவது அவர்களை ஐயரென்பதில்லை. சேக்கிழார் சம்பந்தர் ஒரு பார்ப்பனர் எனினும் அவரைக்கூட ஐயர் என்று அவர் அழைக்க முற்பட்டாரல்லர். ஆயின் இதற்கு நேர்மாருக திருநீலகண்டயாழ்ப்பாணர், திருநாளைப்போவாரென்றநந்தனர்ஆகியோரைப் பல இடங்களில் "ஐயர்" என்று கூறப்பட்டிருப்பதைப் பெரிய புராணத்தில் காணலாம். கடவுளின் கனவுக்கட்டளையின் மீது தில்லையந்தணர்கள் நந்தனரையழைக்க வருகின்றனர். இந்த இடத்திலே "ஐயரே அம்பலவர் அருளாலிப்பொழுதடைந்தோம்" என்றுஐயரேஎன் அழைத்திருப்பது காண்க. இதே போன்று திருநீலகண்ட யாழ்ப்பாணராகிய தாழ்த்தப்பட்ட அடியாரை திருஞானசம்பந்தர் "ஐயர் நீர் உள மகிழ்ந்திங் கடைந்த உறுதி உடையோம் யாம்" என்று குறிப்பிடுகின்ருர் ஓரிடத்தில். தொல்காப்பிய சூத்திரத்தின் விதிப்படி "ஐ" என்ற சொல் வியப்பைக் குறிப்பதென்க. ஐயர் எனின் வியத்தற்குரிய செயலையுடையார் என்பது பொருள். அவர் எக்குலத்தோராயினும் எம்மதத்தோராயினும் ஆகுக.

இனி பெரிய புராணத்திற் கூறப்பட்டுள்ள பெண்களின் தொகை 30 என்று கருதுகின்றேன். இவற்றில் 16 பேர் சொல்லும் செயலும் உடையவர்கள். 14 பேர் செயல் மட்டும் உடையவர்கள். அதாவது 16 பேர் டாக்கி சினிமா நடிகர்களைப் போன்றவர்கள். 14 பேர் சைலண்ட் பட நடிகர்களைப் போன்றவர்கள். இந்த 30 பெண்களின் வாழ்க்கையையும் நாம் துருவித் துருவிக் கவனிப்போமாயின் நாம் திரண்ட பல வாழ்க்கை உண்மைகளைக் காணலாம். பெண்கள் எந்தெந்த சந்தர்ப்பத்தில் எப்படி எப்படி இருக்க வேண்டும். அவர்கள் வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சமும் எத்தகையதாய் இருக்கும்என்ற வினவுக்குசேக்கிழார் கூறிய சேயிழையார் முப்பதின்மரிடமிருந்து எளிதிற் பதில் பெறுதல் இயலும்.

குழந்தைகளின் பருவத்துக்கும் பெற்றோர்களின் நடைமுறைக்கும் பெருத்த சம்பந்தமுண்டென்பதை நாம் அறிதல் வேண்டும். குடும்பநிலை எவ்வாறிருக்கின்றதோ அதற்கேற்பவே குழந்தைகளின் நிலையும் அமையும். காரைக்காலம்மையாரின் இளமைப் பருவமானது நமது கவனத்திற்குரியதாகும். அவர் விளையாட்டானது மற்றையச் சிறுமிகளின் விளையாட்டுப் போலாது விளையாட்டுக் கோயில் கட்டுதல், லிங்கமமைத்தல் பூஜை செய்தல் போன்ற விளையாட்டுகளாக இருந்தனவென்று சேக்கிழார் கூறுகின்ருர். சேக்கிழாரின் இந்தக் கூற்றுக்கு அற்புதத் திருவந்தாதியிலும் ஆதாரம் காணப்படுகிறது. 'பிறந்து மொழி பயின்றபின்னெல்லாம் காதல், சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்" என்றமை காண்க.

பெண்ணின் இசைவுபற்றியே மணஞ் செயப்படல் வேண்டுமென்பதைச் சேக்கிழார் வற்புறுத்துகிருர். சங்கிலி நாச்சியார் ஓர் வேளாள குலத்துப்பெண். பேரழகுப் பெருங்கவினுமுடையாராவர். பெற்ருேர் அவருக்கு மணஞ் செய்விக்கும் நோக்கத்தோடு மணப்பேச்சுப் பேசுகின்றனர். இதைச் செவியுற்ற நாச்சியார் அவ்விடத்தே மூர்ச்சையாகிவிடுகின்ருர். ஏன்? தான் பரமேஸ்வரனிடத்து முன்பே காதல் கொண்டு விட்டமையான் என்க. இதன்மீது சங்கிலியார் திருவொற்றியூர் கோயிலுக்குத் திருப்பணி செய்யும் கொள்கையோடு செல்கின்ருர். அங்கு சுந்தரமூர்த்தி நாயனர் காதல் கொள்கிருர். அவர் சங்கிலியைத் தனக்கு மணமுடித்துக் கொடுக்குமாறு சிவபிரானை வற்புறுத்துகின்ருர். சிவபிரான் அம்மையாரின் கனவிலேதோன்றி "சாரும் தவத்துச் சங்கிலி கேள்" என்று அழைக்கின்ருர். "சாரும் தவத்து" என்று சேக்கிழார் சிவபெருமான் வாய்மொழியாகக் கூறியிருப்பதன் நயம் உணரத்தக்கது. சங்கிலியார் தவத்தைச் சார்ந்தார் என்பதை காட்டிலும் தவம் சங்கிலியைச் சார்ந்தது என்பதே சங்கிலியைப் பெருமைப்படுத்துவதாக இருக்குமாதலாலே இவ்வாறு கூறியுள்ளார் என்பது கருத்திருத்தற்பாலது.

இங்ஙனமே மணஞ் செய்துகொண்ட பெண்கள் எவ்வாறு நடந்துகொள்வதென்ற உண்மையையும் நன்கு விளக்கிக்காட்டுகின்ருர். திரு நீலகக்கனர் தகாத வழியில் நடந்து கொள்வதாக அவர் மனைவியார் அறிந்தார். உடனே பெண்களுக்கு இயல்பாக உடைய ஊடலில் இறங்குகின்ருர். ஆனல் அவ்வூடல் எத்தகைத்து? பொருளின் மூலம் ஏற்படும் ஊடலா? அன்றி தனது சொந்த இன்பத்திற்கு ஏற்படும் இடையூறு கருதிய ஊடலா? அன்று. பின்னர் எத்தகைய ஊடல் என்பதை

"மானமும் பொருது வந்த ஊடல்"

என்கின்ருர் சேக்கிழார். மானம் என்பதற்குப் பரிமேலழகர் "மக்கள் தம்நிலையினின்று தாழாமை" என்றும் "வினையினல் தாழ்வு வரின் வாழாமை" என்றும் குறிப்பிடுகின்ற பெற்றிகாண்க"

இதன் பின்பு தலைவரவர்கள் கருத்துரை கூறினர்கள். பின்பு திரு. எ. பெரி. வீர. வீரப்பசெட்டியாரவர்களின் பொருளுதவியால் மாணவ மாணக்கிகட்குப் பரிசுகள் வழங்கப்பெற்றன. இத்துடன் காலை நிகழ்ச்சி பகல் 12-30 மணிக்கு முடிவுற்றது. வந்திருந்தோர் அனைவருக்கும் சங்கத்தாரால் விருந்தளிக்கப் பெற்றது.

பின்பு பிற்பகல் 3 மணிக்கு மீண்டும்

(18ம் பக்கம் பார்க்க)

# பினங்கில் ராய. சொ. தம்பதிகள்

## செட்டியார்கள் சங்கத்தில் விருந்து

2-4-1936 உ இரவு 8 மணிக்கு எஸ். எஸ். ரஜுலா கப்பலில் நாகப்பட்டணத்திலிருந்து கீழ் நாடுகளுக்கு சுற்றுப் பிரயாணம் செய்வதற்காக வந்த ஊழியன் ஆசிரியர் திரு. ராய. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்களை யும் அவரது பத்தினியாரையும் வரவேற்பதற்காக சங்கத்தின் உத்தியோகஸ்தர்களும் அங்கத்தினர்களும் மற்றும் பிரபல இந்து பிரமுகர்களும் திரளாக கப்பல் துறைமுகத்திற்கு வந்திருந்தார்கள். லாஞ்சு விக்டோரியா பாலத்தை நண்ணியதும் செட்டியார்கள் வர்த்தக சங்கத்து தலைவர் திரு. க. அள ராம. அருணசலஞ்செட்டியாரவர்கள், அவர்களையும் அவரது பத்தினியாரையும் சங்கத்தின் சார்பாக வரவேற்று தம்பதிகளுக்கு மலர் மாலை அணிவித்தார்கள். பிறகு செட்டியார் இளைஞர் சங்கத்தின் சார்பாக தலைவர் திரு. மு. காசிவிஸ்வநாதன் செட்டியார் அவர்களாலும் பினங்கிலுள்ள மற்ற பிரமுகர்கள் தத்தம் சார்பாகவும் திரு. நடேசபிள்ளை ஜே. பி. அவர்களாலும் மலர் மாலை அணிவித்து வரவேற்றார்கள். அவர்கள் சங்கத்திற்கு அழைத்துச் செல்லப்பெற்று மற்றவர்களுக்கு அறிமுகப்படுத்தப்பெற்றது.

3—4—1936உ மாலை 4–30மணிக்கு சங்கக்கட்டிடத்தில் ஆசிரியரவர்களுக்கும் அவரது பத்தினியாருக்கும் தேநீர் விருந்து அளிக்கப் பெற்றது. அந்த வைபவத்திற்கு 200 பிரமுகர்கள் விஜயஞ் செய்திருந்தார்கள் கடவுள் வாழ்த்து பாடப் பெற்றது. காரிய தரிசி திரு. அரு. வீர. அருணசலஞ்செட்டியாரவர்கள் திரு. க. அள. ராம. அருணசலஞ் செட்டியார் அவர்களை இக்கூட்டத்திற்கு தலைமை வகித்து நடத்தும்படி கேட்டுக்கொண்டார்கள். பிறகு தலைவர் அவர்களுக்கு மாலை அணிவிக்கப் பெற்றது. தலைவரவர்கள் ஆசிரியர் அவர்களுக்கும் அவரது பத்தினியாருக்கும் மாலை அணிவித்து விருந்தினரை அறிமுகப்படுத்துகையில் சென்னை ஊழியன் ஆசிரியர் திரு. ராய. சொக்கலிக்கஞ்செட்டியார் அவர்களையும் அவரது பத்தினியாரையும் நம் சங்கத்தின் சார்பாக வரவேற்பதாகவும் அன்னாரவர்கள் சென்ற ஐந்து வருடங்களுக்கு முன்னால் இவண் விஜயஞ்செய்த பொழுது பினங்கில் அச்சமயத்தில் சங்கம் இல்லை என்றும் தற்பொழுது சங்கத்தின் சார்பாக வரவேற்பது குறித்து மிக மகிழ்ச்சி அடைவதாகவும் ஆசிரியரவர்கள் நமது நாட்டிற்கும் நமது சமூகத்திற்கும் செய்துள்ள சேவைகள் மிகஅதிகமானதென்றும் அன்னார் செய்யும் பிரசங்கத்தை ஆவலுடன் கேட்க அநேகம் பேர்கூடியிருப்பதிலிருந்து அவருடைய பெயரும் கீர்த்தியும் தான் சொல்லாமலே விளங்கும் என்றும் அன்னாரவர்களை மறுபடியும் வரவேற்பதோடு அவர்கள் செயவிருக்கும் பிரசங்கத்தை அன்பு கூர்ந்து கேட்டு ஆநந்திக்குமாறு கேட்டுக்கொண்டு ஆசனத்தமர்ந்தார்கள்.

திரு. பிச்சப்பா சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள் திரு. ராய. சொக்கலிங்கம் அவர்களின் காவியத்திறங்களை எடுத்து உரைத்தனர். பிறகு திரு. நா. கு. குப்பான் செட்டியாரவர்கள் விருந்தினர் சமூக சீர்திருத்தத்தில் மிக ஆர்வங்கொண்டவர் என்றும் தேச சேவையிலும் அதிகம் ஈடுபட்டவர் என்றும் எடுத்து உரைத்தார்கள்.

விருந்தினர் பதில் உரைக்கையில் கம்பர், திருவள்ளுவர், பாரதியார் என்ற மூவரின் சான்றுகளாகிய முக்கனிகளைப் பிழிந்து நகைச்சுவை ததும்ப மிக உருக்கமாக ஒன்றரை மணி நேரம் பேசினார்கள்.

தலைவரவர்கள் முடிவுரையாக விருந்தினரின் அரும் பிரசங்கத்தை பாராட்டிப்பேசிய பிறகு காரியதரிசி திரு. அரு. வீர. அருணசலஞ் செட்டியாரவர்கள் வந்திருந்த அனைவருக்கும், விருந்தினர்க்கும் வந்தனோபசாரங் கூறும்பொழுது ஆசிரியரவர்களின் தேசசேவையையும், சமூக சேவையையும் மிகப்பாராட்டி பேசியதுடன் அன்னார் திறம் பட நடத்திவரும் ஊழியன் வாரப்பத்திரிகையை நம் சமூகத்தாரும் மற்றும் ஏனைய தமிழ் அபிமானிகளும் நன்கு ஆதரிக்க வேண்டுமென்று பல சான்றுகளால் எடுத்துக்காட்டிய பின்பு வந்தனோபசாரங் கூறப்பெற்று குரூப் போட்டோ எடுக்கப்பெற்றவுடன் இரவு 7 மணிக்கு கூட்டம் இனிது நிறைவெய்தியது.

# கண்டரமாணிக்கம் ஆண்டுவிழா

## திருச்சி. திரு. சாரநாதன் தலைமை

இராமநாதபுரம் ஜில்லா கண்டரமாணிக்கம் ஸ்ரீ தண்டாயுதபாணி எய்டேட் ஸ்கூலின் மூன்றுவதாண்டு விழா (11-4-36) சனிக்கிழமை பிற்பகல் 3 மணிக்கு திருச்சி நாஷனல் காலேஜ் பிரின்ஸ்பால் ஸ்ரீமான் வி. ஸாரநாதன் எம். ஏ. அவர்கள் தலைமையின் கீழ் நடைபெற்றது.

சிற்றுண்டிக்குப் பிறகு, தலைவரவர்களை மேள வாத்தியம் ஸ்கவுட் மரியாதையுடனும் சிங்காரக் கொட்டகைக்கு அழைத்துவரப் பெற்று, கடவுள் வணக்கம் வரவேற்புப் பாட்டுகளுடன் கூட்டம் ஆரம்பமாயிற்று. ஹை ஸ்கூல் ஹெட்மாஸ்டர் திருவாளர் பி. சுப்பிரமணிய ஐயர் பி. ஏ. எல். டி. அவர்கள் வருஷாந்திர அறிக்கை வாசித்தார். அதில் டீச்சிங்கிராண்டு மிகக் குறைவாக இருக்கிறதென்றும், மாணவர்களுக்குத் தொழிற் கல்வி ஆரம்பிக்கப்பட்டிருக்கிறதென்றும் குறிப்பிடப்பட்டிருந்தது.

பிறகு ஆங்கிலத்திலும் தமிழிலும் சம்பாஷணைகள், மிக அருமையாகவும் எல்லோராலும் கொண்டாடத்தக்கதாயுள்ள பல நீதிகளுள்ளவையாயுமுள்ளதாய் நடந்தன 7-வது வகுப்பு மாணவர் எஸ். சபாபதி "முயற்சியும், வயதும்" என்ற விஷயத்தைப் பற்றி ஓர்சொற்பொழிவு அநேக மேற்கோள்களுடன் நிகழ்த்தினன்.

தலைவர் பள்ளிக்கூடத்தின் முன்னேற்றத்தையும், மானேஜர் திருவாளர் பெரி. பெரி. சுப. நாராயணஞ்செட்டியார் அவர்களின் தாராளத் தன்மையைப்பற்றியும் புகழ்ந்து பேசிவிட்டு "புதிய கல்வியும், தாய்நாட்டு நல்லறமும்" என்னும் விஷயத்தைப்பற்றி அறிய சொற்பொழிவாற்றினர். பெண்கள் கோலாட்டம், கும்மி அடித்த பின்னர், புகைப்படம் எடுக்கப்பெற்றது. மாணவ மாணவிகட்கு பரிசுகள் வழங்கப்பட்டன. தலைவர் முடிவுரையில் இப்பாடசாலையானது எல்லாவிதப் பாடங்களிலும் மேன்மையாக நடத்தப் பட்டிருக்கிறதென்பது பிள்ளைகள் நடிப்பிலிருந்தே சொல்லாமல் விளங்குமென்று குறிப்பிட்டுப் பேசி முடித்தனர். ஹெட்மாஸ்டரவர்கள் வந்தனங் கூறியதின் பிறகு மங்களம் பாடி கூட்டம் இனிது முடிவுற்றது.

இரவு 9 மணிக்கு மாணவர்களால் "பக்த ராமதாஸ்" என்னும் சரிதம் உயர்ந்த சீன்கள் முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்ட கொட்டகையில் பார்ப்பவர்கள் மனதைக் கவரும்படியாக இரவு 2 மணி வரை நடித்தனர். அதில் முக்கிய ஆக்டர்களில், ராமதாஸாக நடித்த எஸ். கிருஷ்ணனுக்கும், அவர் மனைவியாய் நடித்த ஆர். வெங்கடாஜலத்திற்கும், ராமா சாஸ்திரியாய் நடித்த எஸ். சபாபதிக்கும், அவர் மனைவியாய் நடித்த எஸ். ஸேதுராமனுக்கும், தாஸிஷாவாக நடித்த வி. டி. நாராயணனுக்கும் பதக்கங்கள் ஹைஸ்கூல் மானேஜரவர்களால் அளிக்கப்பட்டன. ஷையூர் ஐக்கிய சங்கத்தாரால் ராமதாஸாகவும், அவர் மனைவியாகவும், ராமா சாஸ்திரியாகவும் நடித்த மாணவர்கட்கு தங்கப்பதக்கங்கள் அளிக்கப்பட்டன. பிறகு ஹெட்மாஸ்டரவர்களால் யாவருக்கும் வந்தனோபசாரம் கூறப்பட்டு நாடகம் இனிது முடிவுற்றது.

(ஒரு நிருபர்)





# தேவகோட்டை அட்வகேட்டுக்கு அபராதம்

## ஆசிரியரை அடித்த வழக்கில் தீர்ப்பு

(நமது நிருபர்)

தேவகோட்டை, ஏப்ரல் 19—

தேவகோட்டை ஹைஸ்கூல் உபாத்தியாயர் ஆர். சுந்தராஜய்யங்காரை பிரபல வக்கீல் எஸ். சுப்பிரமணிய அய்யர் தமது குமாரனை சாமிநாதன் என்ற மாணவனை கண்டித்ததற்காக, தம் மாப்பிள்ளை எஸ். ராமசுப்பிரமணிய அய்யருடன் சேர்ந்து நடுவழியில் அடித்ததாக தேவகோட்டை பெஞ்சு கோர்ட்டில் தாக்கல் செய்யப்பட்ட வழக்கின் விபரம் ஏற்கனவே நம் குமரனில் வெளியாகியிருக்கிறது.

பிராஸிகூஷன் தரப்பு சாக்ஷிகள் விசாரிக்கப்பட்ட பின்னர் இரண்டாவது எதிரி ராமசுப்பிரமணிய அய்யர் விடுதலை செய்யப்பட்டு, 1-வது எதிரி வக்கீல் திரு. எஸ். சுப்பிரமணிய அய்யர்பேரில் குற்றப்பத்திரிகை தாக்கல் செய்யப்பட்டது. எதிரிதரப்பில் சாக்ஷிகளின் குறுக்கு விசாரணை முடிந்த பின்னர், சென்ற 18-4-36உ ஷ வழக்கில் தீர்ப்புக் கூறப்பட்டது. பெஞ்சுக்கோர்ட்டு அங்கத்தினர்களில் மெஜாரிட்டியினர் திரு. எஸ். சுப்பிரமணிய அய்யரைக் குற்றவாளியெனத் தீர்மானித்தபடியால், பெஞ்சு கோர்ட்டுத் தலைவர் ஸ்ரீமான் முத்துவேல் பிள்ளையவர்கள் 1 வது எதிரி சுப்பிரமணிய அய்யருக்கு ரூ. 50. அபராதமும் தவறினால் 20 நாள் வெறுங்காவல் தண்டனையும் விதித்து அபராதம் வசூலானால் ரூபாய் 35—0—0 அடிபட்ட உபாத்தியாயருக்கு நஷ்ட ஈடு கொடுக்கும்படி தீர்ப்பளித்தார்கள். எதிரி அன்று தினமே அபராதத்தைச் செலுத்திவிட்டார்.

கோர்ட்டிற்கு ஸ்ரீமதி கமலா சிவசுப்பிரமணியம், ஸ்ரீமான்கள் பொன்னையா பிள்ளை, பாடலிங்க ஆச்சாரியார், சாம்பசிவய்யர், சைனுமுகம்மது ராவுத்தர், வேறு இருவர்களுமாக ஏழு அங்கத்தினர்கள் ஆஜராயிருந்தனர். இவ்வழக்கை கவனிப்பதை முன்னிட்டுக் கோர்ட்டிற்கு ஏராளமான ஜனங்கள் வந்திருந்தனர்.

## கத்தியால் குத்தியவனுக்கு 4 மாதம் கடுங்காவல்

(நமது நிருபர்)

காரைக்குடி, ஏப்ரல் 17

சென்ற மாதத்தில் சின்னையா கொத்தன் மகன் சுப்பிரமணிய கொத்தனை, குச்சுக்காரித்தகராறினால் கரூர் பொன்னுசாமி செட்டி மகன் ராமன் என்பவன் கத்தியால் குத்தியதாகக் காரைக்குடிப் போலீசாரால் கைது செய்யப்பட்ட விபரம் ஏற்கனவே நம் குமரனில் வெளியாகி யுள்ளது.

காரைக்குடி போலீசார் ஷ எதிரி ராமன் பேரில் திருப்பத்தூர் தாலூகா மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்திருந்ததில் பிராஸிகூஷன் தரப்பு சாக்ஷிகள் விசாரிக்கப்பட்ட பின்னர், எதிரி குற்றத்தை ஒப்புக்கொள்ளவே, சென்ற 15—4—36உ திருப்பத்தூர் தாலூகா மாஜிஸ்ட்ரேட் அவர்கள் எதிரியைக் குற்றவாளியெனத் தீர்மானித்து எதிரி ராமனுக்கு 4 மாதம் கடுங்காவல் தண்டனை விதித்தனர்.

காரைக்குடி ஜனசங்கியையில் ஏராளமான விபசாரிகளும் குச்சுக்காரிகளும் பெருத்துவிட்டதன் காரணமாக இதுபோன்ற கத்திக்குத்து சம்பவங்கள் சாதாரணமாக நடைபெறுகின்றன. இதை அதிகாரிகள் கவனித்து விபசாரிகள் விலக்கு சட்டத்தை சீக்கிரத்தில் அமுலுக்குக் கொண்டுவருவார்களென எதிர்பார்க்கப் படுகின்றனர்.

## சென்னை சட்டசபை

### ஆயுள் நீடிக்கப்படும்

உதகமண்டலம், ஏப், 17

வருகிற நவம்பர் மாதத்தோடு முடிவடைகிற சென்னை சட்டசபையின் ஆயுள் மீண்டும் நீடிக்கப்படு மென்பது தெரிய வராமல்போன பொழுதிலும், நீடிக்கப் பெற்ற சட்டசபையின் கூட்டம் அடுத்த காலண்டர் வருஷத்தில் ஒருதடவை கூடுமென்று தெரிகிறது. சட்டசபையின் ஆகஸ்டு மாதக் கூட்டம் வழக்கம்போல் அம் மாதத்தின் முதல்வாரத்தில் கூடும்.



## நாட்டார்—ஹரிஜனத் தகராறு

### பாதிரிமார்களின் வேலை

தேவகோட்டைப் பகுதியில் ஏற்பட்டிருக்கும் நாட்டார்—ஹரிஜனத் தகராறில் ஹரிஜன சேவா சங்கம் விசேஷ சிரத்தைக் காண்பித்துவருகிறது. இதன் பயனாக தேவகோட்டையில் ரூ. 7500-க்கு ஐம்பது ஏக்கர் நிலம் வாங்கப்பட்டிருக்கிறது.

இதற்கிடையில் பாதிரிமார்கள் தங்கள் வேலையை ஆரம்பித்திருக்கிறார்கள். ஹரிஜன சேவா சங்கம் வாங்கியிருக்கிற இடத்திற்கருகில் ஒரு பள்ளிக்கூடத்தை ஏற்படுத்தியிருக்கிறார்கள். ஒன்பது குடும்பங்கள் கிருஸ்தவமதத்துக்கு ஏற்கனவே மாறிவிட்டன. அவர்கள் சொல்லுவதாவது:— "ஜாதி ஹிந்துக்களால் உபயோகப்படுத்தப்பட்டு வருகிற குளத்தில் முதன் முதலாக இப்பொழுதுதான் நாங்களும் தண்ணீர் எடுத்துக்கொள்கிறோம். இந்த உரிமை எங்களைத் தவிர மற்ற ஹிந்து ஹரிஜனங்களுக்குக் கிடையாது. நாட்டார்கள் எங்களுக்கு விதித்துள்ள நிபந்தனைகளில் பித்தளைப் பாத்திரங்களை உபயோகிக்கக்கூடாதென்பது ஒன்று. ஆனால் மதம்மாறின பிற்பாடு தாராளமாக அவைகளை உபயோகித்துவருகிறோம்."

ஹரிஜனங்கள் சம்பந்தமான விஷயத்தில் அறிஞர்கள் தீவிர முயற்சிசெய்து வருகின்றனர்.

## மனைவியின் கற்பில் சந்தேகம்

### வெட்டிய புருஷனை காட்டிக்கொடுக்க மறுத்தாள்

புதுச்சேரிக்கடுத்த அரியாங்குப்பம் என்ற கிராமத்தில் தன் கணவனுக்குத் தான் குற்றமற்றவள் என்று காண்பிப்பதற்காக ஓர் பெண்செய்த ஆச்சரிய விஷயம் இப்பொழுது வெளியாயிருக்கிறது.

காக்கயன் தோப்பு கிராமத்தைச் சேர்ந்த அய்யாவு என்றவன் 23 வயதுள்ள பொன்னுக்கண்ணு என்ற தன் மனைவியின் நடத்தை விஷயமாகச் சந்தேகமுற்று அவள் தூங்கிக்கொண்டிருக்கும்பொழுது கழுத்திலும் முகத்திலும் வெட்டியதை பார்த்துக்கொண்டிருந்த சிலர் போலீசாருக்கு அறிவித்தனர். அவர்கள் வந்து வெட்டுண்ட ஷ ஸ்திரீயை விசாரித்தனர். உண்மையைக் கூறின் தனது கணவனுக்கு ஆபத்து நேரக்கூடு மென்பதைக் கருதி யாரோ ஒருவர் வெட்டிவிட்டுச் சென்றதாகவும் தனக்கு ஆள் தெரியாதென்றும் கூறிவிட்டாள். பிறகு போலீசார் துப்புவிசாரித்துத் தேடிச்சென்ற பொழுது அவன் மரத்தில் சுருக்கிட்டு மாண்டுகிடந்தானாம்.

## இத்தாலியில் சமஸ்கிருதம்

போலண்டிலுள்ள சர்வகலாசாலைகள் 6-லும் சமஸ்கிருத பாஷை கற்பிக்கப் படுகிறது. மேலும்பாஷா தத்துவம் படிப்பவர்க்கு அது கட்டாய பாஷையாக வைக்கப்பட்டிருக்கிறது. இத்தகவலானது போலண்டு புரொபசர் ஒருவரால் காந்திஜிக்கு அறிவிக்கப்பட்டது

அதேபோன்று இத்தாலியிலும் சமஸ்கிருத பாஷை கற்பிக்கப்படுகின்றது. பலர் அந்த மொழியை நன்கு பேசவும் எழுதவும் செய்கின்றனர். இந்தியர்கள் எவரேனும் அங்கு சென்றால் அவர்களிடம் இத்தாலியர் கேட்கும் முதல் கேள்வி சமஸ்கிருதம் தெரியுமா என்பதாகும்.

## ஹிந்துக் கோயில்களுக்கு நன்கொடை

ஆப்கன் அரசரான ஸாகிர்ஷா ஆப்கானிஸ்தானத்திலுள்ள ஹிந்துக் கோயில்களைப் பழுதுபார்க்க 14000 ரூ. நன்கொடை கொடுத்திருக்கிறார்.

## மூத்திரப்பையில்
### ஏற்படும் கஷ்டத்தைப் போக்குங்கள்.



## — மலாய் நாட்டுச் செய்திகள் —

(நமது நிருபர் ஏர்மெயில்)

ரப்பர் கட்டுப்பாட்டுத் திட்டத்திற்குள்ளடங்கிய தேசங்களிலிருந்து பெப்ரவரி மாதத்தில் 60700 டன் ஏற்றுமதியாக்கலாமென்று குறிப்பிடப்பட்டிருந்தும், 62458 டன் ஏற்றுமதியாக்கப்பட்டிருப்பதாக இண்டர் நாஷனல் ரப்பர் ரெகுலேஷன் கமிட்டியாரின் மார்ச்சு மாத அறிக்கை கூறுகிறது. கட்டுப்பாட்டுக்குள்ளடங்காத தேசங்களிலிருந்து பெப்ரவரி மாதத்தில் 569932 டன் ஏற்றுமதி யாக்கப்பட்டிருப்பதாகவும் தெரிகிறது.

### ரப்பர் கட்டுப்பாட்டை மீறியதற்கு அபராதம்

ரப்பர் கட்டுப்பாட்டுச் சட்டப்படி ஏக்கர் ஒன்றுக்கு 30 மரங்கள் மட்டும் புதிதாய் பயிரிட்டுக் கொள்ளலா மென்று நிபந்தனையிருப்பதைக் கவனியாது சோகூர் கிளாங் பாட்டாவில் உள்ள தம் தோட்டத்தில் ஏக்கர் ஒன்றுக்கு சுமார் 86 மரங்கள் வரை பயிரிட்டிருப்பதாகக் குற்றஞ்சாட்டப்பட்டு, சோகூர்பாரில் விசாரிக்கப்பட்டு குற்றவாளியாக்கப்பட்ட சிங்கப்பூர் செட்டியார்களில் பிரபலஸ்தரான சொ. மெய்யப்ப செட்டியாரென்பவர் 500 வெள்ளி அபாரதம் விதிக்கப்பட்டார். மேலும், புதிதாக பயிரிட்ட கன்றுகளையும் செட்டியாருடைய செலவில் பிடுங்கி எறியும்படி உத்திரவிடப்பட்டது.

இக்கேஸை சோகூர்பாரு சீப் போலீஸ் ஆபீசரே நடத்தியதோடு, ரப்பர் அசெஸ்மெண்டு கமிட்டியாரில் இரண்டுபேர் சாட்சி கூறினார்கள். புதிதாக பயிரிட்டிருப்பதாக சோகூர்பாரு ஸ்டேட் விவசாய இலாகா ஆபிசர் உறுதிகூறினர்.

### இந்தோசைனா செட்டியார்கள் சங்கம் செய்கோன்.

யுவ வருடம் பங்குனி மாதம் 15-ந்தேதி (27—3—36) வெள்ளிக்கிழமை மாலை 7-மணிக்கு சங்க நிலையத்தில் ஆறுவது ஆண்டு இரண்டாவது ஸ்பெஷல் நிர்வாக சபைக் கூட்டம் தலைவர் திரு. பழ. கும. குமரப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் கூடியது. 14 அங்கத்தினர்கள் விஜயஞ் செய்திருந்தனர்.

8—3—36-ந்தேதியில் நடைபெற்ற ஸ்பெஷல் பொதுக் கூட்டத்தில் அங்கீகரிக்கப்பெற்ற நமது சங்கத்து புது விதிகளில் இன்னும் சில விஷயங்கள் சேர்க்க வேண்டுமென அபிப்பிராயப்படுவதால், மறுமுறையும் ஸ்பெஷல் பொதுக்கூட்டம் கூடி முடிவு செய்த பின்னர் மேன்மைதங்கிய கவர்னர் அவர்களின் அங்கீகாரத்துக்கு அனுப்பி வைப்பதெனத் தீர்மானிக்கப்பெற்றது. பிறகு காரியதரிசி அவர்களால் வந்தனங் கூறப்பெற்று, இரவு 8 மணிக்கு கூட்டம் இனிது நிறைவெய்தியது.

யுவ வருடம் பங்குனி மாதம் 24-ம் தேதி (5—4—36) மாலை 7 மணிக்கு சங்க நிலையத்தில் ஆறுவது ஆண்டு இரண்டாவது நிர்வாக சபைக் கூட்டம் உபதலைவர் திரு. அ. உ. இராமசாமி செட்டியார் அவர்கள் தலைமையில் கூடியது. 9 அங்கத்தினர்கள் விஜயஞ்செய்திருந்தனர். 1. மார்ச் மாதத்து சங்கத்து நடபடிக்கை விபரங்கள் வாசித்து காண்பித்து அங்கீகரிக்கப்பெற்றன. 2. ஷை மாதத்து கணக்கு விபரங்கள் வாசித்து காண்பித்து அங்கீகரிக்கப்பெற்றன. பிறகு காரியதரிசி அவர்களால் வந்தனங் கூறப்பெற்று இரவு 7½ மணிக்கு கூட்டம் இனிது நிறைவெய்தியது.

### சியாம் அரசரின் தாய் மதமாற்றம்

சியாம் அரசரது தாயார் பாரிசில் ஒரு கிறிஸ்துவளாக மாறிவிட்டதாக அங்குள்ள சியாம் ஸ்தானிகர் தெரிவித்திருக்கிறார். அவரது கலியாணத்திற்கு முன் அவர் அமெரிக்காவில் ஓர் ஆஸ்பத்திரி நெர்சாக இருந்தாராம். சியாம் அரச குடும்பத்தில் கிறிஸ்தவராக மாறியிருப்பது இதுவே முதல் தடவையாகும்.

### மணிலெண்டர்ஸ் சட்ட விஷயம்

மணிலெண்டர்ஸ் சட்டம் அமுலிலிருந்து வருவதால் இனிமேல் யாதொரு நடவடிக்கையும் மலாக்கா செட்டியார்கள் சங்கச் சார்பில் சிங்கப்பூர் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் வர்த்தக சங்கத்தார் எடுத்துக்கொள்ள வேண்டாமென்று மலாக்கா நகரத்தாரவர்கள் கருதுவதாகவும், இதுவரை ஏற்பட்டுள்ள செலவுகளை கணக்குமுடித்து இவிடம் பங்குக்கு எவ்வளவு பணம் அனுப்பவேண்டு மென்று தெரிவிக்கும்படியும் 31—3—36-ல் இங்கிருந்து எழுதிய கடிதத்தை சிங்கப்பூர் நகரத்தாரவர்கள் பார்வைக்கு அனுப்புவதென 2—4—36-ல் நிர்வாக சபையில் தீர்மானித்திருப்பதாக தெரிகிறது.

### மூவார் லாயர் குற்றஞ்சாட்டப்பட்டார்

மூவாரில் லாயர்த்தொழில் செய்துவருகிறவரான மிஸ்டர் எல். ஜி. பிள்ளை என்பவர் தம்மிடம் கேஸ் நடத்துவதற்காக வந்த கட்சிக்காரருடைய 650 வெள்ளியை திருப்பிக் கொடுக்காததற்காக குற்றஞ்சாட்டப்பட்டிருக்கிறார். மூன்று சீனர்கள் தங்கா செட்டியார் ஒருவர் மீது கேஸ்போட்டு அதற்கு சீனர்கள் சார்பாக லாயர் பிள்ளை நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கையில் இருகட்சிக்காரரும் சமாதானமாய்ப் போய்விட்டதால் சமரசத்திற்காக 500 வெள்ளி சீனர்களுக்குக் கொடுக்கும்படி லாயரிடம் ஒப்படைக்கப்பட்டதைத் திருப்பி தாவில்லையென்றும், அட்வான்சாக பீஸ் கட்டிய 150 வெள்ளியும் தாவேண்டுமென்றும் சீனர்களுடைய விவாதம். கேஸ் ஒத்திவைக்கப்பெற்றிருக்கிறது.

### கோலாலம்பூர் நகரத்தார்களின் நன்கொடை

ஐந்தாம் ஜார்ஜ் சக்கிரவர்த்தியின் வெள்ளிவிழா சிலாங்கூர் நிதிக்கு உதவி செய்வதாய் வாக்குக் கொடுத்திருந்த 2000 வெள்ளியையும் 26-3-36 ல் கோலாலம்பூர் நகரத்தார்கள் அனுப்பியிருக்கிறார்கள்.

### கோலாலம்பூரில் பங்குனி உத்திரம்.

4—4—36 சனிக்கிழமை காலை ஏழரை மணிக்கு கோலாலம்பூர் அம்பாங் ஸ்ட்ரீட்டில் உள்ள நகரக்கோயில் காரியக்காரர் வீட்டிலிருந்து சுவாமி புறப்பட்டு ஈப்போ ரோட்டில் இருக்கும் நகரக்கோயில் அடைந்து அடுத்த நாள் ஞாயிற்றுக்கிழமை மகா பூஜையும் திங்கட்கிழமை இரவு கோவிலிருந்து சுவாமி திரும்ப அம்பாங் ரோட்டுக்கு வந்து சேருமென்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. மாஜி மன்னர் ஐந்தாம்ஜார்ஜ் மரணமடைந்தது பற்றி கோலாலம்பூர் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் தங்கள் அநுதாபத்தைக் காட்டி இவ்விழா வைபவத்தில் வழக்கம்போல் கடைசிநாளில் நடைபெறும் வாணவேடிக்கைக் காட்சியை நிறுத்திவைத்தனர்.

### பர்மா ரப்பர் லைசென்ஸிங் கமிட்டி

சுங்க வரிகளை இந்திய சர்க்கார் திருத்தியுள்ளனர். இந்தியா கெஜட்டில் பிரசுரமாகியுள்ள அத்திருத்தம் வருமாறு:—பர்மாவில் ரப்பர் லைசென்ஸ் அளிக்கும் அதிகாரம் ஒரு கமிட்டிக்கு உண்டு. அக்கமிட்டிக்கு பர்மா ரப்பர் லைசென்ஸிங் கமிட்டி என்று பெயர். பர்மா சர்க்கார் இரு மெம்பர்களையும் தோட்டக்காரர்கள் சங்கம் இரு மெம்பர்களையும் நியமனம் செய்யும்.

### சிங்கப்பூர் ரப்பர் விலை

| | | | |
|---|---|---|---|
| ஏப்ரல் | 1உ | $ | 34—83 |
| | 2உ | ,, | 35—00 |
| | 3உ | ,, | 35 |
| | 4உ | ,, | 34—67 |
| | 6உ | ,, | 34—83 |
| | 7உ | ,, | 35—00 |

### விவேகானந்தர் சங்கம் காரைக்குடி

நிகழும் தாது ஆண்டு சித்திரைத் திங்கள் மூன்றாம் நாளில் (15-4-36) மாலை 6 மணிக்கு ஷை சங்கத்தின் எட்டாவது மாதக் கூட்டம் திரு. சா. கணேசன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் திரு. தி. ம. நடராஜன் அவர்கள் "இளைஞர் இயக்கம்" என்பதுபற்றி சொற்பெருக்காற்றினார்கள். தலைவரின் முடிவுரைக்குப் பின் வெ. லெட்சுமணன் வந்தனம் கூற இரவு 8 மணிக்கு கூட்டம் இனிது நிறைவெய்தியது என உபகாரியதரிசி அறிவிக்கிறார்.





## அய்மென் ஷண்முகானந்த சங்கம்
## ஏழாவதாண்டு விழா
### குமரன் ஆசிரியர் அவர்கள் தலைமை

ஷை சங்கத்தின் ஏழாவது ஆண்டு நிறைவு விழா பங்குனித் திங்கள் 23-ம் நாள் ஆரம்பமாயிற்று. அதற்குத் தலைமை வகிப்பதற்காக காரைக்குடி "குமரன்" ஆசிரியர் சொ. முருகப்பா அவர்கள், ஸ்ரீமதி மரகதவல்லியம்மாளவர்களுடன்சவுங்கோத்திலிருந்து ஸ்பெஷல் கப்பலில் 22உ இரவு 11 மணிக்கு அய்மென் வந்து சேர்ந்தார்கள். அவர்களை சங்கத்தார்கள் கப்பலடிக்குச் சென்று வரவேற்றுபசரித்தார்கள். இவ்விழாவிற்காக தத்துவம் சித. நா. நாராயணன் செட்டியார் தம்பதிகளும் காஞ்சிட்டான், சவுங்கோம், சூம்பியோ, நத்தஞ்சான், பாசியன், தாப்பாம், மியாங்மியா, மோல்மேன்சூன், உவாக்கமா, சூங்கோம், போக்கலே, ரெங்கூன், தய்யக்கோன், யுவாத்தி முதலிய ஊர்களிலிருந்து சுமார் ஐந்நூறு அன்பர்கள் வரை விஜயஞ் செய்திருந்தனர். விழாவிற்காக சங்க ஹாலுக்கு முன் இதற்கென போடப்பட்டிருந்த பெரிய கொட்டகையைப் பல பெரியார்களின் வாக்கியங்களும் தோரணங்களும் கொடிகளும் குரோட்டன்ஸ்களும் அழகாக அலங்கரித்தன. 23உ பிற்பகல் 2 மணிக்குமேல் தலைவரவர்களுக்கு மாலையணிவித்து மேளவாத்தியங்களுடன் தலைவர் ஜாகையிலிருந்து ஊர் வலமாக சங்கத்துக்கு அழைத்துவரப்பட்டதும் சுப. ஆறுமுகம் அவர்களால் பக்கவாத்தியங்களுடன் கடவுள் வணக்கம் பாடப்பட்டதும் காரியதரிசி ராம. அருணாசலம் அவர்கள் சொ. முருகப்பா அவர்களை தலைமை வகிக்கும்படி கேட்டுக்கொள்ள தலைவரவர்கள் தமக்கு இடப்பட்ட ஆசனத்திலமர்ந்தார்கள். பின் நா. சுப. ராமகடை அதிபர் உயர்திரு. நாச்சியப்ப செட்டியாரவர்கள் கீழ்கண்ட வரவேற்பு பத்திரத்தை வாசித்து அழகிய கண்ணாடி போட்ட படத்துடன் அளித்தார்கள்.

### வரவேற்புப் பத்திரம்

பெருமைமிக்க தலைவரேறே!

வருக! வருக! தங்கள் வரவு நல்வரவாகுக.

நமது ஷண்முகானந்த சங்கத்தின் ஏழாம் ஆண்டுப் பூர்த்திவிழா தங்கள் தலைமையில் நடக்கும்படியான பாக்கியம்பெற்றது குறித்து நாங்கள் அடையும் மகிழ்ச்சிக்கோரெல்லையில்லை.

அஞ்சா நெஞ்சம் படைத்த அண்ணல்!

சீர்திருத்தம் ஒன்றையே குறிக்கோளாகக்கொண்டு அன்றுமுதல் இன்றுவரை எழுத்திலும் பேச்சிலும் செயலிலும் இடைவிடாது பலமான எதிர்ப்புகளுக்கிடையே பணியாற்றிவரும் தங்களை உங்கள் துணைவியாருடன் வரவேற்பதில் நாங்கள் மிகவும்சந்தோஷமடைகிறோம்.

சீர்திருத்தத்தின் எல்லைகண்ட செல்வ!

சமூகத்தைச் சூழ்ந்திருந்த குருட்டு நம்பிக்கை, தேவையற்ற சடங்குகள், மூடப் பிடிவாதம், என்ற கருமேகங்கள் இன்று சிறிதளவாவது மறைந்திருக்கின்றன என்றால் அதற்குத் தங்களுடைய உழைப்பே காரணம் என்பதை யாரே மறுக்க வல்லார்?

சேந்தமிழன்னையின் சுதந்தரப் புதல்வ!

தங்கள் சீர்திருத்த மொழிகளால் எங்கள் சங்க ஆண்டுவிழாவைச் சிறப்புற நடாத்திப் பலபெரும் நன்மைகளுடன் பல்லாண்டுகள் வாழ்ந்து பணிபல புரிய அருள்பாலிக்குமாறுஎல்லாம்வல்ல இறைவனடிகளை யிறைஞ்சுகின்றோம்.

இங்ஙனம் தங்களன்புள்ள,
ஷண்முகானந்த சங்கத்தார்.

ஷை பத்திரத்தை உவகையுடன் பெற்றுக் கொண்டு தலைவரவர்கள் முன்னுரையாக சுமார் ஒருமணி நேரம் சங்கத்தின் அவசியம், இளைஞர் கடமை, சீர்திருத்தம், கல்வி, என்பவைகளைப்பற்றி மிக அழகாக கேட்போர் பரவசமடையும் வண்ணம் பேசினார்கள். பின் ஸ்ரீமதி சித. நா. விசாலாட்சி பெண்கள் முன்னேற்றம், என்பதுபற்றியும் திருவாளர் பாசியன் சி. ராம. ப. ராம. பழனியப்ப செட்டியார் "கம்பர் கவிச்சித்திரம், என்பது பற்றியும் வயி. சி. மாணிக்கவாசகன் புதுமை, என்பது பற்றியும் போக்கலே பெரி. நாகு. அவர்கள் நிர்மாணத்திட்டம், என்பது பற்றியும் காரைக்குடி முனிசிபல் கௌன்சிலரும் ராமனுதபுரம் ஜில்லா எஜுகேஷன் கவுன்ஸில் அங்கத்தினருமான மு. மரகதவல்லியம்மாளவர்கள், நமது பெண்மக்கள் நிலை என்பதுபற்றியும் சித. நா. நாச்சாள். "நமது நாடும் வெளிநாடும், என்பதுபற்றியும் உவாக்கமா கரு. நாச்சியப்பன்" மனிதவாழ்க்கை என்பது பற்றியும் தத்துவம். சித. நா. நாராயணஞ் செட்டியாரவர்கள். "பர்மா நிலை" என்பதுபற்றியும். சித. நா. வள்ளியம்மை எனும் சிறுமி 'ஒரு சம்பாஷணை' என்பது பற்றியும் மிக அழகாகவும் அமைதியாகவும் சுருங்கச் சொல்லி விளங்கவைத்தல் என்றபடி பேசினார்கள். இடையிடையே சித. நா. விசாலாட்சி, நாச்சாள், சுப. ஆறுமுகம், ஆகியோர்கள் இன்னிசைப்பாக்கள் பாடி மகிழ்வித்தனர். பின்னர் தலைவரவர்கள் முடிவுரையாக ஒவ்வொன்றுக்கும் தக்க சான்றுகளுடனும் சீர்திருத்தம், மாதர் மறுமணம் என்பவற்றைப் பற்றி இரண்டு மணி நேரம் சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்தது போல் பேசினார்கள். பெரியோர்களும் இளைஞர்களும் மிக உற்சாகத்தோடும் அமைதியோடும் ஆர்வத்தோடும் கேட்டின்புற்றார்கள். முதல் நாள்கூட்டம் இரவு 9 மணிக்கு இனிது நிறைவெய்தியது.

24-ம் நாள் பிற்பகல் 3 மணிக்கு மேல் மீண்டும் கூட்டம் ஆரம்பமாகிய து. ராம. மீனாக்ஷிசுந்தரம் "இளைஞரும் சீர்திருத்தமும்" என்பது பற்றியும், உவாக்கமா கரு. நாச்சியப்பன் "ஒற்றுமை" என்பது பற்றியும், பாசியன் சி. ராம. ப. ராம. பழனியப்ப செட்டியாரவர்கள் "நளன் மக்களைக்காணல்" என்பது பற்றியும், சித. நா. நாச்சாள் "பொதுவிஷயம்" என்பது பற்றியும் பேசினார்கள். தலைவரவர்கள் முடிவுரையாக கம்பராமாயணம், புறநானூறு முதலிய தமிழிலக்கியங்கிலிருந்து பல மேற்கோள்கள் எடுத்துக்காட்டி பண்டை அரசியல், தற்கால அரசியல் நிலை, மேல் நாட்டினரின் அபிவிருத்தி, சுதேசியம், சமூக வாழ்க்கை முதலிய விஷயங்களைப் பற்றி நீண்ட நேரம் பேசினார்கள். கற்றோரும் மற்றோரும் வியந்தேற்கும் வண்ணம் அவர்கள் உபந்யாசமிருந்தது. பின்னர் காரியதரிசி திரு. அருணாசலம் அவர்கள் யாவருக்கும் வந்தனம் கூறினதும் திரு. மு. மரகதவல்லியம்மாளவர்கள் தேசியகீதம் பாடினார்கள். பிறகு மங்கள வாழ்த்துடன் இரவு 7 மணிக்கு சபை இனிது நிறைவெய்தியது.

திரு. சொ. முருகப்பா அவர்கள் நண்பர்களுடன் பங்குனி 26உ இரவு மியாங்மியாவுக்குச் சென்றார்கள் என ஸ்ரீ சண்முகநாதன் அறிவிக்கிறார்.

## புதுக்கோட்டை நகரத்தார் சங்கம்

### தர்பார் அறிக்கை கண்டனம்

(நமது நிருபர்)

புதுக்கோட்டை, ஏப் 16—

புதுக்கோட்டை சமஸ்தான நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கத்தின் நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் நேற்று மாலை 6 மணிக்கு டவுனில், மேற்படி சங்கக் காரியதரிசியும், சீப்கோர்ட்டு வக்கீலும், முனிஸிபல் கௌன்சிலருமான ஸ்ரீமான் வி. ஷண்முகம் செட்டியார் வீட்டில் நடைபெற்றது. அரிமளம், ராயவரம், கடியாபட்டி, கோனாபட்டு, நச்சாந்துபட்டி, வலையபட்டி, குழிபிறை முதலிய விடங்களிலிருந்து முக்யமான நகரத்தார் பிரதிநிதிகள் வந்திருந்தனர். ராயவரம் ஸ்ரீமான் ப. த. வ. பழனியப்ப செட்டியார், கடியாபட்டி பி. கு. நாகப்ப செட்டியார், ராயவரம் வெ. மு. சி. பெ. பெரியணன் செட்டியார் முதலியவர்கள் வந்திருந்தவர்களில் முக்யஸ்தர்களாவார்கள். சங்கத்தின்விதிகள் அங்கீகாரம், சங்கத்தை ரிஜிஸ்தர் செய்தல், சங்கத்துக்கு இடம் வாங்குதல், முதலிய விஷயங்களைப்பற்றி பேசித் தீர்மானங்கள் செய்தானபிறகு தர்பார் வருமானவரி அறிக்கையைப்பற்றிகமிட்டி யோசனை செய்தது. விவாதத்தில் முக்யஸ்தர்கள் கலந்துகொண்டு தங்கள் தங்கள் அபிப்பிராயங்களை எடுத்துக் கூறியபின், மேற்படி அறிக்கையைப்பற்றி சங்கத்தாரின் நோக்கம் அபிப்பிராயம் என்னவென்பதைத் தெளிவாக எடுத்துகூற வேண்டுமென்றும் நகரத்தாரைப்பற்றி அறிக்கையில் கூறப்பட்டுள்ள வார்த்தைகளுக்கு சங்கத்தார் வருத்தப்படுவதாகவும் தர்பார் உண்மையை அறிந்து கொள்ளாமல் செய்துள்ள காரியத்தைக் கண்டு வருந்துவதாகவும், நகரத்தாரைப்பற்றி தர்பார் அறிக்கையில் கூறியுள்ள ஆட்சேபகரமான வார்த்தைகளை வாபீஸ் வாங்கிக்கொள்ள வேண்டுமென்றும், சங்கத்தின் நிலையை விரிவாக எடுத்துகூறி தர்பாருக்கு சங்கத்திலிருந்து ஒரு அறிக்கை அனுப்புவதென்றும் தீர்மானிக்கப்பட்டது. இரண்டொருதினங்களில் மேற்படி அறிக்கையும் தர்பாருக்கு அனுப்பப்படுமென்றும் தெரிகிறது.

---

### கமலாநேரு ஞாபகச்சின்ன நிதி நன்கொடை விவரம்

லக்ஷ்மணபுரி, ஏப் 16—

கமலாநேரு ஞாபகார்த்த ஆஸ்பத்திரிக்கு மொத்தம் இதுவரை 17000 ரூபாய் நன்கொடை வசூலாகி யிருக்கிறது. ஸ்ரீமான் புலாபாய 5000-ம் டாக்டர் கட்ஜு 5000-ம் சேத் ஜமன் லால் பஜாஜ் 1000-ம் ஸ்ரீமான் சிவப்பிரசாத குப்தா 1000-ம் டாக்டர் சையத் முகம்மது 500 ரூபாயும் ஸ்ரீமான் எஸ் ஆர் பண்டிதர் 500 ரூபாயும் பெயர் அறிவிக்காமல் சிலர் 4000 ரூபாயும் உதவியிருக்கிறார்கள்.

மிஸஸ் ஆர். எஸ். பண்டிதர் இக்கமிட்டிக்குக் காரியதரிசியாக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

---

### நாட்டரசன்கோட்டை ஸ்ரீ பாரதி வாசகசாலை

ஏப்ரல் 18—

இவ்வூர் திரு. மை. உல. வெ. வெள்ளையப்ப செட்டியார் அவர்கள் குமாரன் திரு. கண்ணப்ப செட்டியாருக்கு யுவ ஹு பங்குனிமீ 25உ நடந்த கலியாணத்தை முன்னிட்டு, ரூ. 5. (ஐந்து)ம், திரு. அரு. கை. ச. சண்முகம் செட்டியார் அவர்கள் புதல்வன் திருவளர் செல்வன் கண்ணப்பனுக்கு யுவ-ஹு பங்குனிமீ 29உ நடந்த காப்புக்கட்டுப் புதுமையை முன்னிட்டு ரூ. 5. (ஐந்து)ம், வாசகசாலைக்கு நன்கொடை உதவியுள்ளார்கள். அவர்கட்கு எங்கள் மனமார்ந்த நன்றி உரியதாகுக என காரியதரிசி தெரிவிக்கிறார்.

## ஸ்ரீமதி கமலாநேரு ஞாபகார்த்தம்

### ஒரு பெரிய ஆஸ்பத்திரி நிறுவ யோசனை

காந்திஜி விருப்பப்படி ஸ்ரீ கமலாநேருவின் ஞாபகார்த்தமாக ஒரு பெரிய ஆஸ்பத்திரியைக் கட்ட ஏற்பாடாகி வருகிறது. அலகாபாத் முனிசிபல் சபையாரும் இதற்கு ரூ. 10000 வரை தருவதாகத் தீர்மானித்துள்ளார்கள். பொது ஜனங்களிடமும் 3 லக்ஷ ரூபாய் வரை வசூல் செய்ய வேண்டுகோள் விடப்பட்டிருக்கிறது. இதைப் பரிபாலிக்க பண்டித மாளவியா, டாக்டர் அன்சாரி, பி. ஸி. ராய், டாக்டர் கே. என். காட்ஜு ஆகியவர்கள் டிரஸ்டிகளாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

இந்த ஆஸ்பத்திரி ஸ்திரீகளுக்கும் குழந்தைகளுக்கும்தான் ஏற்படுத்தப்படுகிறது. ஆனால் சீக்கிரம் இதை ஒட்டி ஜெனரல் ஆஸ்பத்திரியும் திறக்கப்படும்.

---

### பள்ளிக்கூட சம்பள வஜா

உதகமண்டலம், ஏப் 17—

முஸ்லீம்களுக்கும் முன்னேற்றமடையாத வகுப்பினர்களுக்கும் பெண்களுக்கும் பள்ளிக்கூடச் சம்பளத்தில் பாதி வஜா அளிப்பது சம்பந்தமாக இப்போதுள்ள முறையில் அனுபவத்தில் தோன்றியிருக்கும் குறைகளை நீக்க யோசனை கூறுமாறு கல்வியிலாகா டைரக்டர் தலைமையில் ஒரு கமிட்டியை கவர்ன்மெண்டார் நியமித்திருக்கின்றனர். சென்னை மேயர் ஜனாப் அப்துல் ஹமீதுகான், ஸ்ரீமான் ராஜகோபால பிள்ளை, மிஸ் வில்காக்ஸ் மாத்தியூஸ் ஸ்ரீமான்கள் சீதாபதி நாயுடு லக்ஷ்மண ஐயர் முதலியவர்கள் கமிட்டியில் மெம்பர்களாக விருப்பார்கள்.

ஒரு பள்ளிக்கூடத்தின் சம்பள வருமானத்தில் இந்த வஜா 100-க்கு $7\frac{1}{2}$ விகிதத்திற்கு மேல் போகக்கூடாதென்று கவர்ன்மெண்டார் முதலில் ஒரு உத்தரவு பிறப்பித்தனர். பிறகு இதை ரத்து செய்துவிட்டனர். ஆனால் இப்போதுள்ள முறையில் பல குறைகளிருப்பதாயும் தேவையில்லாத அல்லது தகுதியல்லாத பலருக்கு இப்போது வசதியளிக்கப்படுவதாயும் கவர்ன்மெண்டார் கருதுவதாகத் தெரிகிறது.

## ஹிந்து விதவைகள் புனர்விவாக மசோதா

திருவனந்தபுரம், ஏப் 15

ஹிந்து விதவைகள் புனர்விவாக மசோதாவைக் கொண்டுவர திருவாங்கூர் ஜனப் பிரதிநிதி சபை மெம்பரான ஸ்ரீமதி டி நாராயணி அம்மாளுக்கு திருவாங்கூர் திவான் அதிகாரமளித்திருக்கின்றார். இது அனுமதி அளிப்பதற்கான மசோதாவாகும். ஹிந்துவிதவைகளுக்கு விவாகம் செய்வதற்குள்ள சட்டபூர்வமான தடைகளை நீக்குவதற்காகவும் புனர்விவாக மூலம் பிறக்கும் குழந்தைகளைச் சட்டப்படி நியாய வழியில் பிறந்த குழந்தைகளாக்குவதற்காகவும் இம்மசோதா கொண்டுவரப்படுகிறது. இது கணவன் இறந்தபின் விதந்துவாக இருக்க விரும்புகிற ஹிந்து ஸ்திரீயின் சுதந்தரத்தைப் பாதிக்கவில்லை. இது மறுவிவாகம் செய்து கொள்ள அனுமதிக்கப்படும் ஹிந்து விதவையின் உரிமைகளை வகுப்பு சம்பிரதாயம் பாதிக்கவொட்டாமலும் செய்கிறது. 1856-ம் வருஷத்திய பிரிட்டிஷ் இந்தியச் சட்டத்தை ஆதாரமாகக் கொண்டு இம்மசோதா தயாரிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் இம்மசோதா மறுவிவாகத்தினால் விதவைக்கு முதல் கணவனது சொத்திலிருக்கும் பாத்தியதை நீங்கிவிடாதென்று கூறுகிறது. பிரிட்டிஷ் இந்தியச் சட்டம் இதற்கு நேர்மாறான அபிப்பிராயத்தை எடுத்துரைக்கிறது.

---

### வெளிநாட்டில் இந்திய முதன் மந்திரி

ஆசியா கண்டத்திலுள்ள மாகல்லி என்ற ஒரு முஸ்லிம் சமஸ்தானத்தின் முதன் மந்திரியாக கான்பகதூர் ஹாஜி ஷெய்க் அலிபாக்ஜா என்ற சூரத் காரரை நியமித்திருப்பதாகத் தெரிகிறது. இந்தியாவுக்கு வெளியேயுள்ள சமஸ்தானங்களில் இத்தகைய பெரும்பதவியை வகிக்கும் முதல் இந்தியர் இவரே யாவர்.

## சீர்திருத்த மசோதாக்கள்

ஏப்ரல் 1-உ யன்று இந்திய சட்டசபையில் ஸர் கவாஸ்ஜி பார்ஸி விவாகத்து மசோதாவை ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ள வேண்டுமெனப் பிரேரித்தார். அம்மசோதா நிறைவேறி விட்டது.

ஹிந்து ஸ்திரீகள் சொத்துரிமையைப்பற்றி டாக்டர் தேஷ்முக் கொண்டு வந்த மசோதா பொதுஜன அபிப்பிராயத்தை அறிய சுற்றறிக்கை மூலம் அனுப்பப்பட்டது. சாரதா சட்டத்திருத்த மசோதாவும் ஹிந்து விவாக சம்பந்தமாக டாக்டர் பகவன்தாஸ் கொண்டுவந்த ஒரு மசோதாவும் அவ்விதமே சுற்றறிக்கை மூலம் அனுப்பப்பட்டது.

ஆரிய சமாஜ கலியாண செல்லுபடி மசோதாவைப் பரிசீலனை செய்யத் தனிக்கமிட்டி நியமிக்கவேண்டுமென டாக்டர் கோர் ஒரு பிரேரணை கொண்டுவந்தார். இதைப்போன்ற மசோதா ஒன்று முன்னமே பொதுஜன அபிப்பிராயத்தை அறிய சுற்றறிக்கை மூலம் அனுப்பப்பட்டதால் அவ்விதமே இம்மசோதாவையும் செய்யவேண்டுமெனத் தாம் வற்புறுத்தவில்லையென கனம் சர்க்கார் கூறினார். டாக்டர் கோர் பிரேரணை நிறைவேறியது.

முஸ்லீம் ஷரியத் சம்பந்தமாக ஜனாப் அப்துல்லா ஒரு மசோதா கொண்டு வந்தார். கனம் கிரெய்க் இம்மசோதாவில் பல மாறுதல்கள் செய்யப்பட்டிருப்பதால் பலாது அபிப்பிராயங்களையும் அறிந்துகொள்ளவேண்டியது அவசியமென்றும் ஆகவே அதையும் சுற்றறிக்கைமூலம் அனுப்பலாம் என்று கூறினார். அவரது ஆலோசனை ஏற்றுக் கொள்ளப்பட்டது.

ராவ்பகதூர் எம். ஸி. ராஜா தாழ்ந்த வகுப்பினருக்குள்ள அசவுகரியங்கள் சிலவற்றைப் போக்க ஒரு மசோதா கொண்டு வர அனுமதி கோரினார். ஸ்ரீமான் பஜோரியா இது மத விரோதமான மசோதா எனக்கூறி பலமாக ஆக்ஷேபித்தார். கனம் சர்க்கார் ஜூலை 31ந்தேதிக்குள் இதைப்பற்றிபொதுஜன அபிப்பிராயம் அறிய இதைச் சுற்றறிக்கைமூலம் அனுப்புவது நலமெனக் கூறினார். ஸ்ரீமான் ராஜா இதை ஒப்புக் கொண்டதால் கனம் சர்க்கார் பிரேரணை அங்கீகரிக்கப்பட்டது. ஸ்ரீமான் எஸ். கே. சோம் தாரமிழந்த ஹிந்துக்கள் மறுமணம் செய்துகொள்ள விரும்பினால்விதவைகளைத்தான்மணக்கவேண்டுமெனக் கொண்டுவந்த ஒரு மசோதாவை ஸ்ரீமான் சத்தியமூர்த்தி ஆக்ஷேபித்தார். இது வேடிக்கையான மசோதாவென அவர் கூறினார்! ஸ்ரீமான் சோம் மசோதாவை வாபீஸ் வாங்கிக் கொண்டார்.

---

### 66000 பெண் இஞ்சினீயர்கள்

சமீபத்தில் எடுக்கப்பட்ட கணக்கிலிருந்து ரஷ்யாவில் 66000 பெண்கள் இஞ்சினீயர்களாகவும் 12000 பேர் சயன்ஸ் நிபுணிகளாகவும் ஸயன்ஸ் ஆராய்ச்சி சாலைகளில் இருந்து வருகின்றனர். 42 ஆயிரம் பெண்கள் டாக்டர் வேலைக்குப்பயிற்சிபெற்றுவருகின்றனர்

---

### பத்திரிகாசிரியர்களுக்கு ஜெயில்கள்

எகிப்தில் பத்திரிகைகள் சம்பந்தமாகப் புதிய சட்டங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அதன் பிறகு சில முதல்தரமான ஜெயில்கள் நிர்மாணிக்கப்பட்டிருக்கின்றன. ஷை சட்டத்தை மீறும் பத்திரிகைத் தொழிற்காரருக்காகவே இது பிரத்யேகமாக அமைக்கப் பட்டிருக்கின்றது. இதில் மின்சார விளக்குகளும், நவீன வசதிகள் பலவும் இருக்கின்றன.

ஆனால் இந்தத் தங்க ஊசி அழகாகத் தான் இருக்கிறது. அதற்காகக் கண்ணில் குத்திக்கொள்ள முடியுமா?







## அமராவதிபுதூரில் புதிய வருட விழா

தாது வருடப் பிறப்பன்று, விடியற் காலம் 5 மணிக்கு காந்தி சமதர்ம பாடசாலையிலிருந்து, மாணவ மாணவிகளும், ஆசிரியர்களும் தேசீயக்கொடி பிடித்து பஜனை பாடிக்கொண்டு வீதிவழியாக ஊர்வலம் வந்தார்கள். பிறகு காலை 7-30 மணிக்கு (ஜவஹர்லால் கால்பந்து கழகம்) திறந்துவைக்கப்பட்டு, ஒரு மணிநேரம் விளையாட்டு நடந்தது.

பிறகு காந்தி சமதர்ம பாடசாலையில், திரு. நாராயணன் அவர்கள் தலைமையில், புதியவருட விழா மாணவிகளால் வாழ்துப்பாடப்பட்டு 10 மணிக்கு ஆரம்பமாயிற்று. தலைவர் முடிவுரையில், "காலத்தின் ஒரு பாகமாகிய இன்று நாம் சில திட்டங்கள் போட்டுக்கொள்ளவேண்டும். போன வருடத்தில் செய்த வேலைகளை இன்னும் பிழையில்லாமல் செய்ய இவ்வாண்டு புத்துயிர் அளிக்க, நாம் இயற்கை அன்னையை வணங்குவோமாக" என்றுகூறினார்.

பிறகு, மாணவிகள் புது ஆண்டு

(4-ம் பத்தி பார்க்க)

## புதுக்கோட்டை வரவு செலவுத் திட்டம்

பொக்கிஷ மெம்பர் ஸ்ரீமான் ஆர். கிருஷ்ணமாச்சாரியார் வரவு செலவுத் திட்டத்தை சட்டசபையில்ஆஜர்செய்து பேசியதாவது:

நடப்பு (1345-ம்) பஸலியின் வரவு செலவுக் கணக்கின் திருத்தப்பட்ட மதிப்பையும் அடுத்த 1346-ம் பஸலியின் மதிப்புத் திட்டத்தையும் பின் வரும் அபிப்பிராயங்களுடன் இச்சபையில் தாக்கல் செய்ய அனுமதி கோருகிறேன்1344-ம் பஸலியில் தர்பாரவர்கள் தண்ணீர்க் குறைவினால் பாதிக்கப்பட்ட நிலங்களுக்குத் தாராளமாய் வரிவஜாச் செய்ததுடன் விவசாயிகளுக்கு பல சாதகங்கள் செய்தார்கள். மொத்த வருமானம் ரூ. 1665929-2. அனுபந்தத்தில் 1288-ம் பஸலி முதல் 57 பஸலிகளின் வரவு செலவு காட்டப்பட்டிருக்கிறது. அந்த ஸ்டேட்மெண்டிலிருந்து 1344-ம் பஸலி வரவு அதற்கு முந்திய 25 வருஷங்களைக் காட்டிலும் கம்மியென்று தெரிகிறது.

1344-ம் பஸலியின் செலவு ரூபாய் 23,79,326. மூன்று பஸலிகளைத் தவிர சென்ற 57 வருஷங்களின் மற்றெந்த வருஷத்தைக் காட்டிலும் இந்தப் பஸலியில் செலவு அதிகம். விரிவாக நிவாரண வேலைகள் செய்ததும் மிகவும் ஏராளமான கிணறுகள் வெட்டியதும் இந்த அதிகச் செலவுக்குக்காரணம். நிர்ப்பாசனம் என்ற தலைப்பின் கீழ் சாதாரணச் செலவுகூட உபரியாகச் செய்யப்பட்டது.

1343-ம் பஸலி இறுதியில் சமஸ்தானக் கையிருப்புத் தொகை ரூபாய் 25,26,089. குறைந்த வரவு, ஜாஸ்தி செலவு இவைகளின் பயனாய் 1344-ம் பஸலி முடிவில் கையிருப்பு ரூபாய் 18,12,692 க்குக் குறைந்து விட்டது.

1345-ம் பஸலி (1935-36) யின் பட்ஜெட் தயாரித்த காலத்தில் நாங்கள் 23,42,600 ரூபா வருமானம் வருமென்று எதிர்பார்த்தோம். இந்த பஸலியின் முதல் ஏழு மாதங்களின் வருமானத்தையும் பின் ஐந்து மாதங்களில் வரக்கூடிய வருமானத்தையும் யோசித்து கவர்மெண்டார் ரூபா 21,77000 தான் வருமானம் வருமென்று மதிப்பிக்கிறார்கள். இது பட்ஜெட்டில் திட்டப்படுத்தியதைவிட ரூபா 1,65,600 குறைவு.

வருமானத்தில் மொத்தக் குறைவு ரூபா 2,25,850 யென்றும் அதற்கு ஈடு செய்யக்கூடிய உபரி வருமானம் 60,250 ரூபா தானிருக்கு மென்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

1346-ம் பஸலியின் மதிப்புத் திட்டத்தில் ரூபா 22,63,90.) வருமானம் வருமென்றும் ரூபா 19,70,100 செலவு ஏற்படுமென்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதன்படி நிறைவேறிவிட்டால் மிகவும் தேவையான நிகர ஆதாயம் ரூபா 2,92800 நிலைக்கும். இது மிகவும் குறைந்திருக்கும் ரேஷ்மநிதிக்கு உபயோகப்படும்.

---

(1-ம் பத்தித் தொடர்ச்சி)

வாழ்த்துப் பாடப்பட்டது.

குழந்தைகளுக்கு சிற்றுண்டி வழங்கி கூட்டம் 11-30 மணிக்கு முடிந்தது. பிறகு ஒரு பாட்டுக்கச்சேரி, 12-15 மணிவரையில் நடந்தது.

# குமரன்

காரைக்குடி
தாது-ஹூ சித்திரைமீ 11-உ

## ஜாதிக் கொடுமை

இந்திய நாட்டில் ஜாதி வேற்றுமை காரணமாக நிகழும் கொடுமைகள் சகிக்க முடியாதனவாகும். பிறப்பின் காரணமாக வாழ்க்கையின் பொருட்டும் சந்தோஷத்தின் பொருட்டும் சிறு சௌகரியங்கள் செய்து கொள்வதைக் கூட தடுக்க முயற்சிப்பது கொடுமையாகும். தனது உழைப்பால் கிடைத்த பொருளைக் கொண்டு தனது தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளுவதற்கும் கஷ்டங்கள் ஏற்படுகின்றன. உயர் ஜாதி ஹிந்துக்கள் தங்களது ஜாதிச் செருக்கால் மற்ற ஹிந்து சமூகத்தினரிடம் காட்டிவரும் கொடுமை மிக அதிகமாகும். அதன் பயனாக ஏராளமான ஹிந்துமக்கள் பிறமதம் புகுந்தனர். ஜாதிக்கொடுமையை ஒழிக்க வேண்டுமென்று தேச முழுவதும் பெருமுயற்சி நடந்து கொண்டிருக்கும் இந்தச் சந்தர்ப்பத்திலும் மிக அற்பவிஷயங்களில்கூட தாழ்த்தப்பட்ட ஹிந்துக்கள் பால் அதிகக் கொடுமை காட்டப்படுகிற தென்ற செய்தி கிடைத்துக் கொண்டிருக்கிறது.

நமது தென்னாட்டில் தாழ்த்தப்பட்ட மக்கள் சட்டை அணிதல் கூடாதென்றும், பித்தளைக் குடத்தில் தண்ணீர் எடுக்கக் கூடாதென்றும், நகையணியக் கூடாதென்றும் உயர்ஜாதி ஹிந்துக்களால் வற்புறுத்தப்பட்டனர். அதன் பயனாக பல குழப்பங்கள் ஏற்பட்டன. ஆனால் உணவு விஷயத்தில் கொடுமை காட்டிய செய்தி இதுவரை கிடைக்கவில்லை. சமீபத்தில் ஜெயபுரி சமஸ்தானத்திலிருந்து கிடைத்திருக்கும் செய்தி உணவு விஷயத்தில் கூட உயர்ஜாதி ஹிந்துக்கள் தாழ்த்தப்பட்ட ஹிந்துக்களைக் கொடுமைக் குள்ளாக்குகின்றனரென்பதை எடுத்துக் காட்டுகிறது. மற்றோரிடத்தில் பிரசுரித்திருக்கும் அச்செய்தியை நேயர்கள் படித்துப்பார்க்க வேண்டுகிறோம். தாழ்த்தப்பட்ட ஹிந்துக்கள் தங்களது மத சம்பந்தமான காரியங்களை முன்னிட்டுச் செய்யப்படும் சமையலில் நெய் சேர்த்துக் கொள்ள அதிகாரிகளிடம் அனுமதி பெற்றிருந்தும், ஜெயபுரி சமஸ்தான உயர்ஜாதி ஹிந்துக்கள் தாழ்ந்த ஜாதியார் நெய்கலந்துண்ணக் கூடாது என்ற துவேஷ புத்தியைக் காட்டியது வருந்தத்தக்கதாகும்.

இந்திய தேசம் மற்ற தேசங்களுடன் சரி சமமான நிலையில் இருக்க வேண்டுமானால் இத்தகைய அநாகரிகமான கொடுமைகள் ஒழிய வேண்டும். அறிவிருந்தும் செல்வமிருந்தும் பிறப்பின் காரணமாக ஒரு மனிதன் தாழ்ந்த நிலையிலேயே வாழ வேண்டுமென்று கூறப்படும் கொடுமை ஒழிந்தாலன்றி இந்தத் தேசம் உருப்படப் போவதில்லை. இந்திய அரசியல் வாதிகள் சுயராஜ்யத்தைப் பெறுவதற்குக் காட்டப்படும் முயற்சியில் ஓரளவு ஜாதிவேற்றுமையை ஒழிப்பதில் காட்டுவார்களானால் இக்கொடுமை விரைவில் ஒழிந்துவிடுமென்பதில் ஐயமில்லை. ஜாதிப் பூசல்கள் நிறைந்திருக்கும் நிலையிலேயே சுயராஜ்யம் கிடைத்து விட்டாலும், அந்த சுயராஜ்யம் அதிக பிரயோஜனமுள்ளதாக இருக்க முடியாது. எனவே இந்திய தேசத்தை விட்டு ஜாதிக்கொடுமைகள் ஒழிய வேண்டியதன் அவசியத்தை யாவரும் உணர்ந்து செயலாற்ற வேண்டுகிறோம்.

## பியாப்புவேயில் மரகதவல்லிமுருகப்பா

(ஒரு நிருபர்)

பியாப்புவே ஏப்ரில் 15—

குமரன் ஆசிரியர் திரு. முருகப்பா அவர்களும், திரு. மரகதவல்லியாரும் நண்பர்களுடன் மாந்தளையிலிருந்து நேற்றிரவு மெயிலில் இவண் போந்தனர். இன்று முற்பகலில் இவ்வூர் ஹிந்தி தமிழ் வித்தியாசாலையில் ஒரு பெருங்கூட்டம் கூடியது. திரு. மெ. ராம.மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள் இருவர்களையும் சபையோருக்கு அறிமுகப்படுத்திவிட்டு உபந்யசிக்கும்படி கேட்டுக் கொண்டார்கள். திரு. மு. மரகதவல்லி யம்மாளவர்கள் நமது நாட்டிலுள்ள பிரிவினைகளையும் அதனாலேற்படும் இன்னல்களையும்பற்றிப்பேசினார்கள். திரு. முருகப்பா அவர்கள் படிப்பின் அவசியத்தைப்பற்றி வற்புறுத்திப் பேசிவிட்டுப் பள்ளிக்கூடம் நல்ல முறையில் 60 பிள்ளைகளுடன் நடத்துவதைப் பாராட்டிப்பேசினார்கள். இன்றிரவு பின்மனுவுக்குப் புறப்பட்டனர்.

—

### புதுக்கோட்டை சட்டசபை

வருமான வரிக்கு எதிர்ப்பு

புதுக்கோட்டை சட்டசபையின் ஆருவது கூட்டத்தின் இரண்டாவது நாள் நடவடிக்கைகள் ஏப்ரல் 15உ ஆரம்பமாயின. அப்பொழுது, சட்டசபை மெம்பரும் நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்க உப தலைவருமான வலம்புரி திரு. வ. ராம. லெட்சுமணன் செட்டியார் அவர்கள் சர்க்கார் சமீபத்தில் வருமானவரி விஷயமாய் வெளியிடுள்ள ஒரு அறிக்கையைப்பற்றித் தங்களுங்குள்ள ஆட்சேபத்தைத் தெரிவித்துக்கொள்ளவேண்டி ஒரு அவசரப் பிரேரணை அனுப்பியிருந்தார். இது அவசரமான விஷயமல்லவென்றும் பொதுஜன முக்கியத்துவத்திற்கு ஒத்ததாயில்லையென்றும் கூறித் தலைவர் பிரேரணையை நிராகரித்துவிட்டார். இது சம்பந்தமாக பட்ஜட் விவாதத்தின் போது மெம்பர்கள் வெட்டுப் பிரேரணைகள் கொண்டுவருவார்களென்று தெரிகிறது.

—

### கழுவலை திருநாவுக்கரசு வாசகசாலை

(ஒரு நிருபர்)

கொழும்பு, ஏப்ரல் 14—

கழுவலை திருநாவுக்கரசு வாசகசாலையில் தாது சித்திரை முதல் தேதியன்று மாலை 3-30 மணிக்கு தேவகோட்டை திருவாளர் டி. வி. அருணசலம் செட்டியாரவர்கள் தலைமையில் ஒரு பெரிய பொதுக்கூட்டம் நடைபெற்றது. வீரகேசரி அதிபர் திருவாளர் பெ. பெரி. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் "தமிழர் வீரம்" என்பதுபற்றியும் ஷை பத்திரிகை ஆசிரியர் திரு. வ ரா. அவர்கள் "சுதேசியம்" என்பதுபற்றியும் சிறந்த சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். ஏராளமான ஜனங்கள் விஜயஞ்செய்திருந்தனர். முடிவில் சிறந்த சங்கீதக்கச்சேரியொன்றும் நடைபெற்றது.

—

### மேலைச்சிவபுரி

சன்மார்க்க சபை ஆண்டுவிழா

(ஒரு நிருபர்)

குறிப்பிட்டபடி ஷை சங்கத்தின் இருபத்தேழாவது ஆண்டுவிழா ஏப்ரல் 18, 19உகளில் திரு. எஸ். சோமசுந்தர பாரதியவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. புலவர் பெருமக்கள் பலர் சிறந்த சொற்பொழிவுகள் பல செய்தார்கள். செட்டிநாட்டின் பல பகுதிகளிலிருந்தும் ஏராளமான மக்கள் விழாவுக்கு விஜயஞ் செய்தனர்.

## புதிய ராஜப் பிரதிநிதி டில்லி விஜயம்

புதிய டில்லி. ஏப் 18.

லார்டு லின்லித்கோ தம்பதிகள் இன்று டில்லி வந்து சேர்ந்தார்கள். அவர்கள் மிக்க உற்சாகத்துடன் வரவேற்கப் பட்டார்கள். லார்டு லின்லித்கோ இன்று ராஜ விஸ்வாசப் பிரமாணம் செய்து பதவி ஏற்றபின் முதன் முதலாக இந்தியாவின் தலைமை ஸ்தானமாகிய டில்லியில் ரேடியோ மூலம் இந்திய மஹா ஜனங்களுக்குப் பிரசங்கமொன்று செய்தார்.

சென்ற புதன்கிழமை யன்று லார்டு விலிங்டனுக்குப் பிரிவு உபசாரம் நடத்தி டில்லி வாசிகள் அவரை வழி அனுப்பினர். இன்று புதிய இராஜப் பிரதிநிதியை வரவேற்றார்கள். தர்பார் மண்டபத்தில், சுமார் 800 பேர் கூடியிருந்தனர். திருவாங்கூர் மஹாராஜா பாடியாலா மஹாராஜா பிகானீர் மஹாராஜா முதலிய சுமார் 30 சமஸ்தானதிபதிகள் அங்கிருந்தனர். நிருவாக சபை அங்கத்தினர்களும் சட்ட சபை அங்கத்தினர்களும் ஏராளமாகக் கூடியிருந்தனர். ஆனால், காங்கிரஸ் கட்சியினர் வரவில்லை. ரயிலில் பிரயாணம் செய்து வந்தாலும் களைப்பு சற்றுமின்றி லார்டு லின்லித்கோ ராஜவிஸ்வாஸப் பிரமாணம் செய்தார். இராஜப்பிரதிநிதி பிரமாண அறிக்கையைத் தெளிவாகவும் நிதானமாகவும் படித்தார். லார்டு லின்லித்கோ ராஜ விஸ்வாசப் பிரமாணம் செய்து பதவி ஏற்றபின் அங்கிருந்த எல்லோருடனும் அவர் கைகுலுக்கினர். புதிய ராஜப் பிரதிநிதி இளமையாகத் தோன்றுகிறார். இன்னும் நரையும் ஏற்படவில்லை. லார்டு லின்லித்கோ தம்பதிகள் நீண்ட உருவமுடையவர். இராஜப்பிரதிநிதியின் முகத்தைப் பார்த்தால் அவர் உறுதியுடன் நடக்கக்கூடியவர் எனத்தெரிகிறது.

அகில இந்திய ஹிந்துமகா சபைத் தலைவர் என்ற முறையில் புதிய இராஜப் பிரதிநிதியை வரவேற்பதாகவும் அவரது உத்தியோக காலத்திலாவது கவர்ன்மெண்டுக்கும் பொதுஜனங்களுக்கும் அதிக அன்னியோந்நியம் ஏற்படவேண்டுமென விரும்புவதாகவும் பண்டித மாளவ்யா ஒரு தந்தியனுப்பியிருக்கிறார். வியாழக்கிழமையன்று இராஜப்பிரதிநிதி ஸிம்லாவுக்குப் புறப்படுவார். அதற்கு முன் வழக்கப்படி அவர் டேராடூனுக்குச் செல்வார். பண்டித கிருஷ்ண காந்த மாளவ்யா இன்றைய வைபவத்துக்குக் காந்தி குல்லாயுடன் போயிருந்தார். ஸ்ரீமான் ஆனேயும் அங்கு சென்றிருந்தார்.

—

### வில்லிங்டன் பிரயாணம்.

லார்டு வில்லிங்டன் ராஜப்பிரதிநிதி பதவியை விட்டு விலகி இங்கிலாந்து போக இன்று கப்பலேறினர். அவர் தமக்கு பம்பாய்க் கார்ப்பொரேஷன் படித்துக்கொடுத்த உபசாரப்பத்திரத்திற்கு விடைபளிக்கையில் பிரிட்டிஷாரும் இந்தியரும் ஒத்துழைத்ததால் இந்தியாவுக்குப் பல அநுகூலங்கள் ஏற்பட்டிருப்பதாகவும் இனியும் அவநம்பிக்கையையும் சந்தேகத்தையும் தவிர்த்து பரஸ்பர நம்பிக்கைகொண்டு இந்தியா ஏகாதிபத்தியத்தின் கதியை நிர்ணயிக்கும் பூரண பங்காளித்துவ நிலையை அடையச் சேர்ந்துழைக்க வேண்டுமென்றும் ஒத்துழைப்பினால் முன்னிலும் அதிக அநுகூலமேற்படுமென்றும் வற்புறுத்தினர்

—

### திருத்தம்

சென்ற வாரம் வெளியான ப்ரேமமணி என்ற தலைப்புள்ள கதையில் "ரஜூலா"க் கப்பல் என்றிருப்பதை "ராஜீவி கப்பல்" என்று திருத்தி வாசிக்க வேண்டுகிறோம்.

## விஸ்வகர்ம வாலிப சங்கம்

காரைக்குடி ஏப் 22

தேவகோட்டை விஸ்வகர்ம வாலிப சங்கத்தின் சார்பில் ஓர் பொதுக்கூட்டம் நேற்று மாலை 5 மணிக்கு சங்கக் கட்டிடத்தில் அட்வகேட்டும் பெருஞ்சீர்திருத்த வாதியுமாகிய ஸ்ரீ எஸ். லெட்சுமிரதன் பாரதி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்ட ஆரம்பத்தில் ஸ்ரீ சுப்பிரமணியாச்சாரியாரால் கடவுள் வணக்கம் பாடப்பட்டது. பின்னர் ஸ்ரீ. சுப்பிரமணிய தேசிகர் "அன்பு" எனும் பொருள் பற்றி பேசியதும் செட்டிமார் நாட்டு சர்வதேசத் தோழமைச் சங்கஸ்தாபகரும் அமெரிக்க நாட்டினருமான ரெவரண்டு R. R. கெய்த்தான் துரையவர்கள். "தொழிலின் பெருமை" எனும் விஷயம் பற்றி தமிழிலேயே மிக அழகாகப் பேசினர்.

பின்னர் விஸ்வபந்து ஆசிரியர் ஸ்ரீ.தி. ம. நடராஜன் அவர்கள்" தற்காலம் நமக்குத் தேவையான கல்வி எது என்பதைப் பற்றி மிக நன்றாக விளக்கிப் பேசினர், இந்திய இளைஞர் சங்கத்தைச் சார்ந்த ஸ்ரீ ஜி. சுப்பிரமணியன், சித. திருநாவுக்கரசு, ஸ்ரீ லெட்சுமண ஆச்சாரி ஆகியோரும் பேசினர். கடைசியில் தலைவர் முடிவுரையில் பாரதியார், திருக்குறள் ஆகியவற்றிலிருந்து பலமேற்கோட்கள் எடுத்துரைத்து மிக இனிமையாக சுமார் அரைமணிநேரம் பேசினர். சங்கக் காரியதரிசியால்எல்லோருக்கும் நன்றி பாராட்டப்பட்டு இரவு எட்டுமணிக்குக் கூட்டம் இனிது நிறை வெய்தியது.

### மததுபட்டியில் உண்ணுவிரதம் நிறுத்தப்பட்டது.

மததுபட்டியில் தெருக்கள்ஆக்ரமிப்பு விஷயமாக திரு. வேலாயுதம் செட்டியார் தாம் மேற்கொண்ட உண்ணுவிரதத்தை ஏப்ரல் 18உ முதல் நிறுத்திவிட்டார். பல பிரமுகர்கள் சேர்ந்து இது விஷயமாக சௌகர்யமான ஏற்பாடுகள் செய்வதாகக் கூறியிருக்கின்றனர்.

—

### உத்தியோக மாற்றம்

ராமநாதபுரம் ஜில்லா செஷன்ஸ் ஜட்ஜ் மிஸ்டர் இ. ஜி. பார்ட்டர் ஜூன் 15உ முதல் சித்தூர் ஜில்லா ஜட்ஜாக மாற்றம். மிஸ்டர் எஸ். வி. காம்பலன் ஜூன் 22உ முதல் ராமநாதபுரம் செஷன்ஸ் ஜட்ஜாக ஆக்ட் செய்ய நியமனம்.

—

### தங்க ஏற்றுமதி

9176475 ரூபாய் தங்கம் அயல் நாடு சென்றது

பம்பாய் ஏப் 18—

இன்றோடு முடிவடையும் வாரத்தில் பம்பாயிலிருந்து 91,76475 ரூபாய் பெறுமான தங்கம் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதியாயிற்று. இங்கிலாந்து தங்கமதிப்பு முறையைக் கைவிட்டது முதல் இன்று வரை பம்பாயிலிருந்து மொத்தம் 267,64,78'332 ரூபாய் பெறுமான தங்கம் ஏற்றுமதியாயிருக்கிறது.

### ஹிந்துஸ்தான நாஜிகள் 100 ஆண்டுக்குள் இந்திய ஹிட்லர் தோன்றுவாராம்

"ஆரிய சமாஜிகள் ஹிந்துஸ்தானத்தின் நாஜிகள் இன்னும் ஒரு நூற்றுண்டுக்குள் ஒரு ஹிட்லர் இந்தியாவிலும் தோன்றக்கூடுமென்று இந்திய நாஜிகள் எதிர்பார்க்கின்றனர். ஜெர்மன் நாஜிகள் தங்களை ஆரியரென்கின்றனர். ஹிந்துக்கள் தாம் மிகப் பழைய காலத்திலிருந்து ஆரியரென்னப்படுகின்றனர். இந் நாட்டிற்குக்கூட ஆர்ய வர்த்தம் என்றுதான் பெயர்" எனக் காவீரீடம் சங்கராச்சாரி பம்பாயில் கூடிய ஆர்ய சமாஜ 61-வது வருடாந்தரக் கொண்டாட்டத்தை ஆரம்பித்து வைத்த போது கூறினர்.



## மதிப்புரை

### தியாகி

[ஆசிரியர்:வடுவூர்,இராம சடகோபன் வருஷ சந்தா மூன்று ரூ. கிடைக்குமிடம்:— தியாகி ஆபீஸ், பரிக்கல், இருந்தை போஸ்டு, தென்னாற்காடு.]

ஷை வாரப்பத்திரிகை நமது பார்வைக்கு வந்தது. கிராம ஜனங்களின் அந்தஸ்தையும் நலன்களையும் உயர்த்து வதென்ற நன்னோக்கத்தை இப்பத்திரிகை கொண்டிருப்பதாக அறிகிறோம். கிராம வாழ்க்கையை உயர்த்த தியாகிகளால் தான் முடியுமென்பதற்கு அறிகுறியாக இப்பத்திரிகைக்கு இப்பெயர் அமைந்திருக்கிறது. பொது ஜனங்கள் இதை ஆதரிப்பார்களாக.

### ஸௌத் இந்தியன் டைம்ஸ்

[ஆங்கிலோ இந்தியத் தமிழ் வாரப் பத்திரிகை. ஆசிரியர்:—எம். வெங்கட்டராம சாஸ்திரி M. A. L. T. வருஷ சந்தா உள்நாட்டுக்கு மூன்று ரூபாய். கிடைக்குமிடம் ஷை ஆபீஸ், மதுரை.]

மதுரையிலிருந்து வெளியாகும் இப்பத்திரிகையின் முதல் இதழ் நமக்குக் கிடைத்தது. தமிழ் மொழி, வியாபாரம், கல்வி, கைத்தொழில், கிராம நிலை முதலியவற்றை அபிவிருத்தி செய்யும் நோக்கத்தோடு வெளியாகும் இப்பத்திரிகையைப் பொது ஜனங்கள் வரவேற்கக் கடமைப்பட்டுள்ளார்கள்.

### நவீனம்

[ஒரு மாதாந்திர நாவல் சஞ்சிகை. ஆசிரியர்:— டி. குமாரசாமி. வெளியிடுவோர் வி. எஸ். சாமி அண்டு கோ, வேப்பேரி, சென்னை. வருஷ சந்தா:— ஒரு ரூபாய்.]

இது நாவல் சஞ்சிகை. நல்ல கதைகளையும், நாவல்களையும் வெளியிட்டு ஜனங்களுடைய படிப்புச் சுவையை நல்ல வழியில்பயன்படுத்த வேண்டுமென்பது இச்சஞ்சிகையின் நோக்கமென்று அறிகிறோம். பாட்டு, கதை, சினிமாப் பகுதி, செய்திகள் முதலியனவும் இதில் வெளிவருகின்றன. இதன் கொள்கையும் நோக்கமும் நன்கு பூர்த்திபெற வேண்டுமென்று விரும்புகிறோம்.

### திருப்புகழமிர்தம்

[ஒரு மாத வெளியீடு. ஆசிரியர்:— கிருபானந்தவாரி, கிடைக்குமிடம் ஷை ஆபீஸ், 2/7 ஐயா முதலித் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை. வருஷ சந்தா ஒரு ரூபாய்.]

இப் பத்திரிகையின் முதல் இதழ் கிடைக்கப் பெற்றோம். புத்தக ரூபத்தில் அமைந்திருக்கிறது. திருப்புகழின் பதவுரை, கருத்துரை, விரிவுரை, அதன் நீதிகள், அதிலடங்கியுள்ள வரலாறுகள் முதலியவற்றை தெள்ளத் தெளிய விளக்குவதாக இருக்கின்றது. திருப்புகழ் சம்பந்தமான விரிந்த அறிவு பெறுவதற்கு மிகுந்த உதவியான இச்சஞ்சிகையை வரவேற்கிறோம்.

### ஜவகர்லால் நேரு

[ஒரு ஜீவிய சரித்திரம். தினமணி ஆசிரியர் டி. எஸ். சொக்கலிங்கம் எழுதியது, சென்னை அல்லையன்ஸ் கம்பெனியாரின் வெளியீடு, விலை அணா ஐந்து]

இது ஜனங்களால் நிச்சயமாகத்தெரிந்து கொள்ளப்படவேண்டிய ஒருவரது சரித்திர நூல். அழகான நடையில் எழுதப்பட்டிருக்கிறது. ஜவகர்லாலின் வாழ்க்கையின் ஒரு நல்ல பிரதிபிம்பமாக இந்நூல் விளங்குகிறது. இந்நூலின் மூலம் ஜவகர்லால் நமக்கு மிக நன்கு பழக்கமான ஒருவராகிறார். ஜனங்கள் படிக்கவேண்டியநல்லநூல் என்று சுருக்கமாகக்கூற விரும்புகிறோம்.

## சுயமரியாதைத் திருமணம்

சென்ற 12-ந்தேதி மாலை 5-30 மணிக்கு பட்டிவீரன்பட்டி சௌந்திர பாண்டியன் அவர்கள் பங்களாவில் காஞ்சிபுரம் தோழர் சின்னசாமி அவர்கட்கும் ஈரோடு தோழியர் அனுசூயா பாய் அவர்கட்கும்திருமணம் நடைபெற்றது.

திருமணத்திற்கு ஆண்களும் பெண்களுமாக சுமார் 1000 பேர்கள் வரை விஜயம் செய்திருந்தார்கள். ஷை திருமணத்தை நடத்திக் கொடுக்கும்படி விருது நகர் முனிசிபல் சேர்மென் தோழர் ராமசாமி அவர்களை சௌந்திர பாண்டியன் கேட்டுக் கொண்டார்.

பின்னர் மணமகனும் மணமகளும் தங்கள் வாழ்க்கை ஒப்பந்தத்தை நிறைவேற்றிக் கொண்டார்கள். திருமணத்தைப் பற்றி தோழர்கள் ஈ. வெ. ரா, பொன்னம்பலம் முதலியோர் பேசினார்கள். தலைவர் முடிவுரைக்குபின் கூட்டம் கலைந்தது.

### பொதுக் கூட்டம்

அன்று மாலை 7 மணிக்கு தோழர் V. V. ராமசாமி தலைமையின் கீழ் ஒரு பொதுக் கூட்டம்நடைபெற்றது. பெண்களும் ஆண்களுமாக சுமார் 2000 பேர் வரை விஜயம் செய்திருந்தார்கள். "சுயமரியாதை இயக்கம்" என்பது பற்றி தோழர்கள், பொன்னம்பலம், மாணிக்கம், K. V. அழகர்சாமி, ஈ. வெ. ரா. முதலியோர் பேசினார்கள். மறுநாள் சித்தையங்கோட்டையில் டாக்டர் பழனிவேல் பிள்ளை அவர்கள் தலைமையின் கீழ் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் K. V. அழகர்சாமி, ஈ. வெ. ரா. சாமி சிதம்பரனர் முதலியோர் சுயமரியாதை இயக்கத்தின் நோக்கத்தைப் பற்றிப் பேசினார்கள்.

—

### தலைநகர் இன்னும் 80 மைல் தான்

இத்தாலிய முன்னணிப்படை அட்டிஸ் அபாபாவிலிருந்து 80 மைலுக்கருகாமையில் வந்துவிட்டது. தலைநகரைப் பாதுகாக்க அபிஸீனியர் தீவிரமான ஏற்பாடுகள் செய்துவருகின்றனர். எந்தக் கஷ்ட நஷ்டங்களையும் லட்சியம் செய்யாமல் அவர்கள் போராடுவார்கள். உடல் வலுவுள்ள அபிஸீனியரெல்லாம் படையில் சேர்ந்து யுத்தம்செய்யத் தயாராகவேண்டுமென்றும் சேரத் தவறுகிறவர்கள் சவுக்கடிக்கும் அபராதத்திற்கும் ஆளாவார்களென்றும் சர்க்கார் அறிக்கை வெளியிட்டனர். இந்த அறிக்கை வெளியானதும் 5000 பேர் முன்வந்து சாகுந்தனையும் போராடத் தயாராயிருப்பதாக உறுதிகூறினர்.

## கண்டனூர் என்கிரோச்மெண்டு வழக்கு

### பஞ்சாயத்துபோர்டுக்கு பாதகமான முடிவு

(நமது நிருபர்)

திருப்பத்தூர், ஏப்ரல் 22

கண்டனூர் மீனாட்சி சங்கமிருந்து வரும் கட்டிடத்தின் வாசற்கதவை தெருவில் நீட்டிக்கொண்டிருக்கும்படி திறந்து வைத்த என்கிரோச்மெண்டு செய்ததாய் லோகல்போர்டு ஆக்டு 159 (1) பிரிவின்படி ஷை சங்க பிரசிடெண்டு திரு. பெ. மு. பழ. பழனியப்ப செட்டியார் மீது கண்டனூர் பஞ்சாயத்து போர்டார் திருப்பத்தூர் தாலூகா மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்தனர். தாலூகா மாஜிஸ்டிரேட் திரு. சுப்பையா பிள்ளையவர்கள் எதிரி திரு. பழனியப்ப செட்டியார் லோகல்போர்டு ஆக்டு 159 (1) பிரிவின்படி குற்றஞ் செய்யவில்லையென்றுகூறி எதிரியை இன்று விடுதலை செய்தார்.

பஞ்சாயத்து போர்டாருக்காக மதுரை வக்கீல் ஏ. வைத்தியநாதய்யரும் தேவகோட்டை பார்த்தசாரதி அய்யங்காரும், எதிரிக்காக தேவகோட்டை அட்வகேட் லெட்சுமிரதன் பாரதியும் ஆஜரானர்கள்.

—

### நேமத்தான்பட்டியில் ஆண்டுவிழா

(ஒரு நிருபர்)

குறிப்பிட்டபடி சென்ற சனிக்கிழமையன்று நேமத்தான்பட்டி திருநாவுக்கரசு வித்தியாசாலையின் 10-வது ஆண்டு விழா மாலை 4 மணிக்கு ஆரம்பமாயிற்று. சென்னை நவசக்தியாசிரியர் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் தலைமை வகித்தார்கள். தலைவரவர்களை ஊர்வலமாக அழைத்துவந்தபின் உபசாரப் பத்திரம் வாசித்தளிக்கப் பெற்றது. பின்பு அறிக்கை படித்தபின் தலைவர் மாணவர் மாணவிகளின் பாட்டு பேச்சு முதலியவைகள் ஆரம்பமாகுமென்று அறிவித்தார்கள். அவை நடந்தபின் பள்ளத்தூர் தமிழ்ப் பண்டிதர் மாணிக்கம் பிள்ளையவர்கள் உலகுக்கு உய்வளித்த உத்தமர்கள் என்பது குறித்தும் தேவகோட்டை லட்சுமிரதன் பாரதியவர்கள் "முன்னேற்றம்" என்பது குறித்தும் பேசினர். மாணவ மாணவிகளால் காரைக்காலம்மையின் சரித்திரம் நடித்துக் காட்டப் பெற்றது. தலைவரின் அரிய முடிவுரைக்குப் பின் வந்தன வாழ்த்துடன் விழா இனிது நிறைவெய்தியது.



## தந்திச் செய்தி

### இரங்கூன் மார்க்கெட்

(நமது நிருபர் தந்தி)

ரெங்கூன், ஏப்ரல் 22

| | |
|---|---|
| படகு நெல் | 92—93 |
| ரயில் நெல் | 91—94 |
| நசெய்ன் சின்னமில் | 235 |
| நசெய்ன் எஸ்கியூ | 242-8 |
| மீடோன் பஜார் | 247-8, 250 |
| மீடோன் எஸ்கியூ | 257-8 |
| ரெடி புழுங்கலரிசி மார்க்கெட் லாங் | 262-8, 270 |
| மில்சார் | 240—255 |
| புல்பாயில்டு | 237-8, 242-8 |
| யாதாலே | 270—280 |

### சிங்கப்பூர் மார்க்கெட்

(நமது நிருபர் தந்தி)

சிங்கப்பூர் ஏப்ரல், 20

ரப்பர் முப்பத்தைந்து வெள்ளி அறுபத்தாறரைக் காசு.

—

## கப்பல் செய்திகள்

### நாகபட்டினத்திற்கும் பினங்குக்கும்

(ஏஜண்டினிடமிருந்து)

புறப்படுதல்

கப்பல்கள் நாகபட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரஜுலா | 25—4—36 |
| ரோணு | 9—5—36 |

வருதல்

கப்பல்கள், மலாய் நாட்டிலிருந்து நாகபட்டணத்துக்கு வரும் தேதி வருமாறு:—

| | |
|---|---|
| ரோணு | 30—4—36 |

(French Mail)

சைகோனுக்கு புதுச்சேரியிலிருந்து கப்பல் புறப்படும் தேதி:—

| | | |
|---|---|---|
| ,, | பியெர்சி | 13—5—36 |
| ,, | ஏஞ்சர்ஸ் | 10—6—36 |
| ,, | ஸ்பின்க்ஸ் | 6—7—36 |

—

### பிரிட்டிஷ்காரரின் பீர் பானம்

81 கோடி காலன் குடித்திருக்கிறார்கள்.

பிரிட்டிஷ் மக்கள் பீர் பானத்தில் விசேஷப் பிரியம் காட்டி வருகின்றார்கள். சென்ற வருடத்தில் அவர்கள் மொத்தத்தில் 817,000,000காலன் பீர் குடித்திருக்கின்றார்கள்- அவர்கள் அதே காலத்தில் 802,000,000 கலன் பால் குடித்திருக்கிறார்கள்.

பீர், திராக்ஷ ரசம், சாராயம் முதலியவற்றிற்காக பிரிட்டன் சென்ற வருடத்தில் 237,732,000 பவுன் செலவு செய்திருக்கிறது. இத்தொகை முந்தின வருடத்தைப்பார்க்கிலும் 8,703,000 பவுன் அதிகம். பிரிட்டன் சென்ற வருடத்தில் பீர் பானத்திற்காக 149,886,000 பவுனும், திராக்ஷாசத்திற்காக 21,680,000 பவுனும், சாராயத்திற்காக 62,166,000 பவுனும் செலவு செய்திருக்கிறது.

—

### மதுரை தேச சேவிகை மறைவு

சட்டமறுப்புக்காலத்தில் சிறைசென்றவரும் பிரபல பெண் தொண்டருமான மதுரை ஸ்ரீமதி பத்மாசனியம்மாள் அவர்கள் காலமானதாகத் தெரிகிறது.

—

### சிங்கப்பூரில் ஆகாயப் படை

லண்டன், ஏப் 16

தூரகிழக்கு உலகில் பிரிட்டன் தன்னுடைய ஆகாயப் படையை பலப்படுத்தி வருகிறது. காப்டன் ஏ. எச். பாக்லீனியர் ஆகாயப்படை அதிகாரியாக நியமனம் செய்யப்பட்டிருக்கின்றார். நீண்ட தூரம் பயணம் செய்யக்கூடிய யுத்த விமானங்களும் குண்டு மாரி பொழியும் விமானங்களும் சிங்கப்பூருக்காக அமைக்கப்பட்டு வருகின்றன.

## இராமநாதபுரம் ஜில்லாபோர்டு

### ரெஸ்டோர் விவாதம்

18-ந் தேதி காலே இராமநாதபுரத்தில் ஜில்லாபோர்டு ஆபீஸில் மேற்படி போர்டின் மாதாந்திரக் கூட்டம் போர்டு தலைவர் இராமநாதபுரம் இராஜா தலைமையில் நடைபெற்றது. போர்டின் மூன்று கூட்டங்களுக்கு வராததால் ஸ்தல ஸ்தாபனச் சட்டம் 56 (1) (எச்) பிரிவின்படி தங்கள் ஸ்தானங்களை ராவ்பகதூர் ஆர். வி. ரா.ரங்கநாதம்பிள்ளை, ஆதிமூல நாயக்கர் பி. எஸ். குமாரசாமி ராஜா, எஸ். ஆர். எம். கோபால்சாமி ரெட்டியார், எஸ். ஓ. எஸ். பி. உடையப்பா முதலியோர் இழந்துவிட்டார்கள் என்ற பிரெஸிடெண்டின் குறிப்பின் மீது பலத்த விவாதம் நடைபெற்றது. இவ்வைந்து அங்கத்தினர்களில் குமாரசாமி ராஜாவைத் தவிர மற்ற நால்வரும் பிரஸ்தாபக் கூட்டத்திற்கு ஆஜராகி நேரில் தங்களை அங்கத்தினர்களாகச் சேர்த்துக்கொள்ளுமாறு கூறியதால் அவர்கள் மீண்டும் அங்கத்தினராய்ச் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள்.

கூட்டத்திற்கு ஆஜராகாத் திரு. குமாரசாமி ராஜா சட்டப்படி 15 நாட்களுக்குள் லோகல்போர்டுச் சட்டம் 56 (4) வது பிரிவின்படி மெம்பர் ஸ்தானத்திற்கு மனுக்கொடுக்காத நிலைமையில் ரெஸ்டோரேஷன் பிரச்னை எழவில்லையென்று மெம்பர் ஸ்ரீமான் பொன்னுச்சாமி பிள்ளை ஆட்சேபித்தார்.

ஸ்ரீமான் ஸி. வி. ஸி. டி. வெங்கிடாசலம் செட்டியார் பேசுகையில் மேற்படி ரெஸ்டோரேஷன் விஷயத்தில் ஸ்ரீமான்கள் காளைராஜா பாளையம்பட்டி ஜமீன்தார் இவ்விருவருக்கும் காட்டின சலுகையை பிரஸ்தாப விஷயத்திலும் அனுசரிக்கக் கூடாதா வென்று கேட்டார். போர்டில் இரண்டொருவர் தவிர மற்ற யாவரும் குமாரசாமி ராஜாவுக்கு சாதகமாகவே அபிப்பிராயம் தெரிவித்தனர்.

ஸ்ரீமான் ராஜா தமது ஸ்தானத்தை இழந்துவிட்டதால் போர்டார் அனுப்பிய நோட்டீஸ் அன்னாருக்குக் கிடைக்காததினால், அன்னவரிடமிருந்து பதில் வரவில்லையென்றும் ஆகவே அடுத்த கூட்டம் வரை பதிலை எதிர்பார்ப்பதென்றும் அவர் விஷயத்தை முடிவு செய்யாது ஒத்திவைப்பதென்றும் முடிவு செய்யப்பட்டது.

ஸ்ரீமதி கமலாநேருவுக்கு அனுதாபந் தெரிவிப்பதாய் திரு. ஆதிகேசவப் பிள்ளையால் பிரரேபிக்கப்பட்ட தீர்மானம் ராஜாராம் பாண்டியனால் ஆமோதிக்கப்பட்டு நிறைவேறியது.

---

### ஆகாய விமானத்தில் பிரசவம்

ஸ்வீடன் பின்லந்து எல்லையிலிருந்து 120 மைல்களுக்கு அப்பாலுள்ள போலன் நகரிலுள்ள ஆஸ்பத்திரிக்கு ஒரு விமானம ஒரு கர்ப்பிணியை ஏற்றிச் சென்றது. வழியில் ஆகாய விமானத்திலேயே அப்பெண் பிரசவித்துவிட்டாள். தாயும் குழந்தையும் சௌக்கியமாயிருக்கிறார்கள். ஆகாய விமானத்தில் பிறந்த குழந்தை எந்த தேசத்துப் பிரஜை என்று நீதி நிபுணர்கள் விசாரித்து வருகிறார்களாம்.

---

### ஏராளமான சாட்சியங்கள்

#### இந்தியா மந்திரி பதில்

சுபாஷ் பாபு கைதி செய்யப்பட்டது பற்றி இந்தியா உதவி மந்திரி மிஸ்டர் பட்லரை சிலர் பேட்டி கண்டார்கள். ஸ்ரீமான் சுபாஷ் பாபுக்கு விரோதமாக ஏராளமானசாட்சியங்களிருப்பதாகவும் அவரை விசாரணைக்குக் கொண்டு வந்தால் புரட்சி இயக்கம்பற்றிய சாட்சியம் வரும் மார்க்கம் அடைபட்டுவிடுமென்றும் மிஸ்டர் பட்லர் கூறியதாகத் தெரிகிறது.

## சர்க்கார் கடன் பத்திரங்கள்.

(சென்னை ட்ரோஜன் கம்பெனியாரிடமிருந்து)

ஏப்ரல் 21-உ யன்று கவர்ன்மெண்டு செக்யூரட்டிகளின் விலை:—

| | வாங்குவோர் ரூ. | அ. | விற்போர் ரூ. | அ. |
|---|---|---|---|---|
| 3% 1941 .... | 104 | 7 | 104 | 8 |
| 3% 1951-54 .... | 103 | 13 | 103 | 14 |
| 3½% கவர்ன்மெண்டு பிராமிசரி நோட்டுகள் .... | 98 | 5 | 98 | 7 |
| 3½% 1947-50 | 107 | | 107 | 1 |
| 4% 1943 .... | 110 | 12 | 110 | 13 |
| 4% 1960-70 .... | 113 | 13 | 113 | 15 |
| 4½% 1955-60 .... | 118 | 10 | 118 | 11 |
| 5% 1939-44 .... | 108 | 13 | 108 | 14 |
| 5% 1940-43 .... | 111 | 8 | 111 | 9 |
| 5% 1945-55 .... | 120 | 2 | 120 | 4 |
| 5½% 1938-40 .... | 108 | 5 | 108 | 6 |
| 3% 1956-61 மைசூர் .... | 101 | 2 | 101 | 4 |
| 3½% 1951-58 „ .... | 105 | 2 | 105 | 4 |
| 4% 1953-63 „ .... | 110 | 3 | 110 | 5 |
| 5% 1955 „ .... | 122 | | 122 | 2 |
| 5½% 1938 „ .... | 107 | 10 | 107 | 12 |
| 6¼% 1940 „ .... | 114 | 4 | 114 | 6 |
| 6½% 1941-51 .... | 121 | 2 | 121 | 6 |
| 5% 1943-53 கொச்சி .... | 111 | | 111 | 2 |

### பங்கு விலைகள்

| பாங்குகள் | ரூபாய். |
|---|---|
| ரிசர்வ் பாங்கு | 127– 8 |
| இம்பீரியல் பாங்கு (ரூ 500) | 1532– 8 |
| ஷை (ரூ 125) | 377– 8 |
| ஸெண்ட்ரல் பாங்கு | 28– |
| இண்டியன் பாங்கு (ரூ 50) | 131– 8 |
| ஷை (ரூ 10) | 32– 6 |



### மறுதாரம் செய்யத் தடை

#### ஒரு திருத்தம்

சென்ற 9–4–36உயில் வெளியான குமரனில் "மறுதாரம் செய்யத் தடை" என்ற செய்தியின்கீழ் பிரசுரமாயுள்ளதில் "வயிரவன் செட்டியாரின் மனைவி" என்றும், "அசல் வழக்குப் பிரதிவாதி வயிரவன் செட்டியார்" என்றும் செய்தியின் மத்தியில் தவறுதலாக பிரசுரமாயிருக்கின்றது. அதற்குப்பதிலாக "அ. ராம. சு. வயி. முத்துக்கருப்பன் செட்டியாரின் மனைவி" என்றும், "அசல்வழக்கு பிரதிவாதி அ. ராம. சு. வயி. முத்துக்கருப்பன் செட்டியார்" என்றும் படித்துக்கொள்ளவும்.

சென்னை ஹைக்கோர்ட்டில் கீழ்க்கோர்ட்டு உத்திரவை ரத்துசெய்ய வேணுமாய் போடப்பட்ட அப்பீலில் நீதிபதி பர்ன் துரையவர்கள் 18-3-36ல் கீழ்க்கோர்ட்டு உத்திரவை ஸ்திரம் செய்து அப்பீலை நிராகரித்துவிட்டனர். அதன் பின்னர் லெட்டர்ஸ் பேடண்டு அப்பீல் சீப ஜஸ்டிஸ் முன்பும் நீதிபதி கிங் துரை முன்பும் தாக்கல் செய்யப்பட்டதில் 2—4—36உ ஷை அப்பீல் சிலவு துகையுடன் தள்ளப்பட்டது.

## கம்பெனி ஷேர் விலைகள்.

(கதிரேசன் கம்பெனியாரிடமிருந்து)

காரைக்குடி, 22–4–36

இவ்வாரம் கல்கத்தா மார்க்கெட்டுகளில் சணல் மில் ஷேர்களும் சர்க்கரை கம்பெனி ஷேர்களும் பம்பாய் மார்க்கெட்டுகளில் மில் ஷேர்களும் சிமண்டு கம்பெனி ஷேர்களும் கூடுதலான விலைக்கு வியாபாரம் நடந்தது. மதராஸ் மார்க்கெட்டுகளில் பாங்கு ஷேர்களும் சர்க்கரை கம்பெனி ஷேர்களும் கூடுதலான விலைக்கு கிறுக்கியுடன் வியாபாரம் நடந்தது.

| ஷேர் விலை. | டிவிடெண்டு | பெயர் | நடப்பு விலை. |
|---|---|---|---|
| | | **பாங்குகள்.** | |
| 100 | 3½% | ரிசர்வு பாங்கு | 127 |
| 25 | 6% | செண்டிரல் பாங்கு | 33 |
| 50 | 15% | இந்தியன் பாங்கு | 132 |
| 10 | 15% | ஷை | 27¾ |
| 50 | 9% | திருவாங்கூர் நேஷனல் | 54 |
| 25 | 9% | கொல்லம் பாங்கு | 27 |
| 100 | 6% | இன்டோ கமர்சியல் | 112 |
| | | **மில்கள்** | |
| 100 | 20% | காளீஸ்வரர் | 270 |
| 100 | 7% | கோகாக் | 160 X D |
| 00 | 12% | ராதாகிருஷ்ண | 125 |
| 100 | 7½% | வசந்தா | 108 |
| 100 | 6% | காட்டன் | 102 |
| 50 | 10% | லெட்சுமி | 55 C D |
| 50 | 8% | ராஜலெட்சுமி | 52 X D |
| 15 | 10% | மதுரை | 33 |
| 10 | 8% | கம்போடியா | 11¼ |
| | | **மின்சார கம்பெனி** | |
| 100 | 10% | திருச்சி ஸ்ரீரங்கம் | 172 |
| 100 | புதிது | கிழக்கு தஞ்சாவூர் | 107 |
| 10 | 6% | கும்பகோணம் | 12 C D |
| 10 | 6¼% | வேலூர் | 14¾ |
| 10 | 3¾% | வெஸ்ட்கோஸ்டு | 10⅛ |
| | | **இன்சூரன்ஸ்.** | |
| 15 | 8 5/16% | நியூ இந்தியா | 41½ |
| 15 | 5% | ஜுபிடர் ஜெனரல் | 12 |
| 10 | 5% | வல்கன் | 7¼ |
| | | **சர்க்கரை கம்பெனி** | |
| 10 | 25% | கான்பூர் ஷுகர் | 34½ |
| 10 | 12½% | காரு & கோ | 21 |
| 10 | புதிது | பூலண்டு சுகர் | 14½ |
| 10 | 2½% | பாரத் சுகர் | 8 |
| 10 | 11¼% | மைசூர் சுகர் | 27 |
| 10 | புதிது | இந்தியா சுகர் | 8¼ |
| | | **டீ & ரப்பர் கம்பெனி.** | |
| 10 | 17½% | ஹைலண்டு புரோட்யூஸ் | 18 |
| 10 | 4% | தேவ சோலாடீ | 6 |
| 22½ | 5% | டிராபிகல் பிளாண்டேஷன் | 8¼ |
| 10 | புதிது | கூர்க்கு ரப்பர் | 19 |
| | | **மிஸ் லேனியஸ்.** | |
| 10 | 7½% | பர்மா கார்ப்பரேஷன் | 7 |
| 10 | 4½% | பிரைமியர் ஹோசரி | 8 |
| 10 | 18¾ | புண்டி சிமிண்டு | 37 |
| 10 | 7½% | பஞ்சாப் சிமிண்டு | 25 |
| 90 | புதிது | கோயமுத்தூர் சிமிண்டு | 172 |
| 15 | 2½% | சிண்டியா ஸ்டீம் நாவிகே. | 15 |
| 6 | புதிது | பிரிட்டீஷ் பர்மா பெட். | 6¼ |

---

### பிள்ளையார்பட்டி

#### தொண்டர்களின் கிராமப் பிரசாரம்

(ஒரு நிருபர்)

அகில இந்தியா தேசிய வாரக் கொண்டாட்டத்தை முன்னிட்டு பிள்ளையார்பட்டி திரு. எஸ். சுடலைமுத்து பிள்ளை, மு. முத்தழகு, கே. ராமனுதன், மு. சோமசுந்தரன், க. சின்னையா அள. கோட்டயன், குன்னக்குடி கு. மு. முத்துராமன், கிருஷ்ணசாமி முதலியார், கு. மு. வீராசாமி, ஸ்ரீனிவாசன், அண்ணாமலை, ஷண்முகம், தங்கவேலு முதலியோர்கள் பிள்ளையார்பட்டி தேனுச்சி அம்மன்கோவில், சிறுகூடல்பட்டி, குன்னக்குடி, ஓ. சிறுவயல் தென்கரை முதலிய ஊர்களில் காங்கிரசும் நமது கடமையும் என்பதுபற்றியும் அங்கத்தினர்களாய் காங்கிரசில் சேரவேண்டியதன் அவசியம் குறித்தும் உணர்ச்சி ததும்ப சொற்பொழிவாற்றினார்கள்.



# குற்றவாளிகளும் விஞ்ஞான உதவியும்

## இரத்த ஆராய்ச்சியால் ஏற்படும் பிரயோஜனம்

## கொலைக்குற்றவாளியையும் கண்டுபிடிக்கும் அதிசயம்

ஒருதரம் குற்றஞ்செய்து தண்டிக்கப்பட்டவரின் விசேஷ அங்க அடையாளங்கள் கைரேகை சரித்திரச் சுருக்கம் முதலானவைகளைப் போலீஸார் பதிவுசெய்து வைப்பது வழக்கம். இவை பிற்பாடு இவன் இன்னான் இத்தகையோன் என்பதை நிரூபிக்க மிகுந்த உதவியளிக்கும். ஆயினும் தந்திரம் மிகுந்தவன் சில திராவகங்களின் உதவியால் தனது கைரேகையின் அமைப்பையும் சுலபமான ஆபரேஷனால் முகத்தையும் மாற்றித் தப்பித்துக்கொள்வதும் உண்டு. விஞ்ஞான விசேஷங்கள் தெரியாமலோ தெரிந்ததும் உபயோகியாமலோ உள்ள குற்றவாளிகள் மேல் நாடுகளில் இல்லையென்றே சொல்லி விடலாம்.

மேற் கூறியதையும் தடுக்க வழியுண்டா? விஞ்ஞானம் உதவியளிக்குமா? அது முடியுமென்று இப்பொழுது எண்ண இடமிருக்கிறது. தந்திரமிக்க அத்தகைய குற்றவாளிகளையும் அடக்க புதியதோர் ஆயுதம் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு தனி மனிதனுடைய கைரேகையும் வெவ்வேறாக அமைந்திருப்பது போலவே அவர்களுடைய வழிக்குப் பின்னால் பலவிதமாகப் பின்னிக்கொண்டிருக்கும் இரத்த நாளங்கள் (வீனஸ்—அசுத்த இரத்தக் குழாய்) தனித்தனி விதமாகவும் முற்றிலும் ஒன்றுக்கொன்று வேறுபட்டதாகவும் இருப்பதாக டாக்டர்கள் கார்லெடன் சைமன், ஈரோ கோல்ட்ஸ்டீன் என்ற இருவரும் கூறுகின்றனர். தாங்களே செய்த நுண்ணியதொரு காமிராவின் உதவியால் ஆயிரக்கணக்கான விழிகளின் படங்களைப் பிடித்துப் பரிசோதித்ததில் ஒவ்வொன்றும் வெவ்வேறு விதமாக இருந்ததை இந்த இரண்டு டாக்டர்களும் தெரிந்துகொண்டனர். கருவிழிகளின் வழியாக ஒளிக்கிரணங்களைச் செலுத்தி விழியின் பின்புறம் சுற்றிக்கொண்டிருக்கும் இரத்த நாளங்களைப் படம் பிடிக்கின்றனர். ஒன்றுக்கும் மற்றொன்றுக்கும் உள்ள வித்தியாசத்தைச் சுலபமாய்க் கணக்கிடுவதற்காக சம அளவுள்ள சிறுசிறு கூட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ள திரையின் வழியாக கண்ணின் படம் பிடிக்கப்படுகிறது. அக்கட்டங்கள் யாவும் எண்ணிக் கையிடப்பட்டிருப்பதால் படத்தின் ஒவ்வொரு பாகமும் செவ்வனே நிச்சயம் செய்யப்படுகிறது. பிறகு அவை நான்கு வகுப்பாகப் பிரிக்கப்பட்டுப் பதிவு செய்துவைக்கப்படுகின்றன.

ஒருவனை இன்னானென்று நிரூபிக்கும் இப்புதிய முறையை அமெரிக்க ஐக்கியமாகாணத்தின் நியாய இலாகாவும் நியூயார்க் போலீஸாரும் பரிட்சை பார்த்து வருகின்றனர். கைரேகையையோ முக அடையாளங்களையோ மாற்றி அமைத்துக் கொள்வதைப்போலக் கண்ணின் பின்னுள்ள இரத்த நாளங்களின் அமைப்பை எவ்விதத்திலும் மாற்ற முடியாது. ஆகவே குற்றவாளிகளை இன்னானென்று நிர்த்தாரணஞ் செய்வதில் இப்புதிய முறை அதிக உபயோகமாயிருக்கும் என்பதில் ஐயமில்லை.

உண்மையில் பலவிதமான குற்றவாளிகளைக் கண்டுபிடிப்பதைவிட இவனேதான் அதைச் செய்தான் என்று நிரூபிப்பதே மிகவும் கடினம். இந்தக் கடினமான பாகத்தில் தான் சயன்ஸின் உதவி அதிகம்வேண்டியிருக்கிறது. ஸயன்ஸும் பற்பலவிதமான தந்திரங்களை உபயோகித்து அக்கஷ்டத்தை நிவர்த்தி செய்கிறது.

சுமார் 4 மாதங்களுக்கு முன்பு வயதான ஒருவர் அமெரிக்காவில் ஒரு ஹோட்டலில் இறந்துகிடந்தார். பல முக்கிய காரணங்களால் அது தற்கொலையென்றே தெரிந்ததும் அவர் யார்? எதற்காகத் தன்னைத்தானே ரிவால்வரால் சுட்டுக்கொண்டு இறந்தார்? என்பது நிச்சயிக்கப்படவேண்டியதாயிற்று. ஆனால் அவர் சாமர்த்தியமாகத் தன்னை உண்மையாக இன்னானென்று பிறர் அறியாமல் இருக்கும்படி எல்லாவற்றையும் மறைத்துவிட்டார். சொந்தப் பெயரை மறைத்துவிட்டுப் பொய்யான பெயரை வைத்துக்கொண்டார். அவரிடமிருந்த துணிகளில் வண்ணான் குறிகள் காணப்படவில்லை. அவரைக் காட்டிக்கொடுக்கக்கூடிய எந்த விதமான கடிதமும் அகப்படவில்லை. ஆனால் அவர் அலட்சியம் செய்தது ஓர் அல்ப வஸ்து—அவரது மூக்குக் கண்ணாடி. அதுவே அவரைக் காட்டிக்கொடுத்துவிட்டது. ஆயினும் அக்கண்ணாடியும் பல சுக்கலாய் உடைந்திருந்தபோதிலும் பலவித நுண்ணிய ஆராய்ச்சியின் பயனாக அது செய்யப்பட்ட தொழிற்சாலை கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால் வருஷத்தில் பல்லாயிரக் கணக்கான கண்ணாடிகளை விற்றுவந்த பனிரெண்டு கிளை ஆபீஸ்கள் அதற்கு இருந்தது. இன்னும் கூர்மையாக ஆராய்ச்சி செய்ததில் அந்த கண்ணாடியின் நம்பர் முதலானவை நிச்சயிக்கப்பட்டன. உடனே அந்த கிளை ஆபீஸ்களில் உள்ள ரிஜிஸ்தர்களை சோதித்ததில் இறந்தவர்களைப் போன்ற குறிப்பிட்ட வயதுடைய எவன் அத்தகைய கண்ணாடியை வாங்கினனென்று தெரிந்தது. ஆகவே அற்பமான உடைந்த மூக்குக் கண்ணாடியின் உதவியால் இறந்தவன் இன்னானென்று நிரூபிக்க சயன்ஸ் உதவியளிக்கிறது.

இப்படியே ஆற்றில் மிதந்து வந்த ஒரு பிணத்தின் கைவிரலிலிருந்த மோதிரத்தின் உதவியால் அவன் யாரென்று கண்டுபிடிக்கப்பட்டது. பெரிய நகை வியாபாரிகள் தாங்கள் விற்கும் நகைகளால் ஓர் இரகசியமான இடத்தில் அவர்களின் கம்பெனி அடையாள மொன்றைச் செதுக்கி வைத்திருப்பார்கள். ஆகவே அந்த மோதிரத்திலிருந்த அடையாளத்தினால் எந்தக் கம்பெனியில் யார் அந்த மோதிரத்தை வாங்கினார்களென்று கண்டு பிடிக்கப்பட்டது. இந்த முக்கியமான அடையாளத்துடன் மற்ற விஷயங்களையும் ஒன்று சேர்த்துப் பார்த்தும் அவனைச் சுட்டுக் கொன்று ஆற்றில் தள்ளியவனைக் கண்டுபிடிக்க வழியேற்பட்டது. இவ்விதமே ஒவ்வொருவனது சரீர அமைப்பிலும் தனிமையாக விளங்கும் சில உடற்கூறுபாடுகள் அவனை இன்னானென்று நிரூபிக்க உதவுகின்றன. உதாரணமாக அவற்றில் தலைசிறந்து விளங்கும் இரத்தப் பரீட்சையை இங்கு சற்று விவரிக்கிறேன். நியூயார்க் நகரில் ராக்பெல்லர் இன்ஸ்டிடியூட்டில் இருக்கும் இரத்த ஆராய்ச்சி நிபுணர் டாக்டர் காரல் லாண்ட்ஸ்டீனர் என்பவர் இவ்வரிய விஷயத்தைக் கண்டுபிடித்து 1930-ம் ஆண்டில் நோபல் பரிசைப் பெற்றார். அவர் ஒரு மனிதனுடைய இரத்தத்திலுள்ள சிகப்புப் பொருளை மற்றொரு மனிதனுடைய வீரத்துடன் (இருவகையான காரீப் ஸெல்களும் பிரிக்கப் பட்டபின் இரத்தத்தில் மிகுந்திருக்கும் தண்ணீர் போன்ற தனிப் பாகத்திற்கு வீரம் என்று பெயர்) கலந்து பார்த்ததில் அந்த சிவப்புப் பொருள் பல படியாகப் பிரிந்து சிறு சிறு குவியல்களாக அமைந்தன. இவ்விதமான மாறுதல் எல்லா விதமான கலப்பிலும் உண்டாகவில்லை. சில மனிதர்களுடைய செல்களை வேறு குறிப்பிட்ட சில மனிதர்களுடைய வீரத்துடன் கலந்த போது தான் ஏற்பட்டது. இவ்விதம் ஏற்படும் மாறுதல்களுக்குக் காரணம் சிவப்பு ஸெல்களிலுள்ள பொருட்களுடன் வீரம்சம்பந்தப் படுவதேயாகும். ஸெல்லிலுள்ள அந்தப் பொருளுக்கு "அக் ளூடி னேஜன்" என்று பெயர் மனித ரத்தத்தின் ஸெல்லில் அவ்விதமான பொருட்கள் இரண்டு இருக்கின்றன.

அவற்றை நாம் 'அ' என்றும் 'ஆ' என்றும் குறிப்பிடுவோம். எந்த மனிதனது இரத்தத்திலும் இவை இரண்டில் ஏதாவது ஒன்றும் அல்லது இரண்டும் அல்லது இரண்டுமேயல்லாமலும் இருப்பதால் இரத்தத்தை நான்கு விதமாகப் பிரித்திருக்கின்றனர். ஆகவே குறிப்பிட்ட ஒருவன் எந்த வகுப்பான இரத்தத்தை உடையவன் என்று சுலபத்தில் கண்டுபிடித்துவிடலாம்.

மேலே கூறப்பட்ட இரத்தப் பரிட்சையின் ஆச்சரியமான உபயோகத்தைக் கீழ்வரும் கொலைக்கேஸ் நன்றாக விளக்கிக்காட்டும். கத்தியால் குத்தப்பட்டு ஒருவன் இறந்தான். போலீஸார் அவனது பழைய நண்பன் ஒருவன்மீது கொலைக்குற்றம் சாட்டினர். அவன் இறந்தவனைத் தனக்குத் தெரியுமென்றும், கொலை நடந்ததாகக் கூறப்பட்ட நேரத்தில் இறந்தவனது வீட்டிற்குச் சமீபத்தில்தான் காணப்பட்டது உண்மையென்றும், தனது உடைகளிற் காணப்பட்ட ஈரமான இரத்தக்கறைகள் மனித இரத்தத்தால் ஏற்பட்டவையேயென்றும் தன் வீட்டிலிருந்து போலீஸார் கண்டுபிடித்த இரத்தம்தோய்ந்த கத்தி தன்னுடையதேயென்றும் ஒப்புக்கொண்டான். இந்தசந்தர்ப்பசாட்சியங்களைக் கொண்டு அவனைக் குற்றவாளியென்றே தீர்மானிப்பதில் ஆட்சேபமில்லை. ஆனால், குற்றவாளி தான் மாமிசத்தை நறுக்கும் பொழுது கத்தி தவறுதலாய்க் கைவிரலில் பட்டதென்றும் அந்த இரத்தக் கறையே தன் உடையிலும் கத்தியிலும் காணப்பட்டதே ஒழிய தான் அவனைக் கொல்லவில்லையென்றும் வாதித்தான். இச்சமயத்தில் லாண்ட்ஸ்டீனர் கண்டு பிடித்த இரத்தம் பரிட்சையின் உதவியில்லாவிட்டால் அவனது வார்த்தையை ஒருவரும் நம்பியிருக்க மாட்டார்கள். நிரபராதியான அவன் தூக்கில் மாண்டிருப்பான். டாக்டர்கள் அவனது இரத்தத்தையும் உடையிலும் கத்தியிலும் காணப்பட்ட இரத்தக் கறையையும் இறந்த மனிதனுடைய இரத்தத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தபொழுது இரண்டும் வெவ்வேறு வகுப்பைச் சேர்ந்தவையென்று தெரிந்தது.

இத்தகைய இரத்தப் பரீட்சை தற்காலத்து விஞ்ஞான விசேஷங்களுள் ஒன்றாக விளங்கிய போதிலும் வேறு வகையில் இந்தப் பரிசோதனை பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே சில நாடுகளில் வழங்கி வந்தது. உதாரணமாக ஜப்பான் தேசத்தில் முன்பின் தெரியாத ஒருவன் மற்றொருவனுக்குத்தான் உறவு என்று கூறினால் அவ்விருவரது சரீரத்திலிருந்தும் இரத்தம் எடுத்துத் தண்ணீரில் விடுவது வழக்கமாம். அந்த இரண்டு இரத்தங்களும் ஒன்றாகக் கலந்து ஓடினால் அவ்விருவரும் சொந்தக்காரர்களே என ஜனங்கள் நம்பி வந்தனர். இன்னும் இறந்துபோன ஒருவனுக்கு உயிருடன் இருக்கும் மற்றவன் சொந்தமென்று கூறினால் அவனுடைய தேகத்திலிருந்து இரண்டு துளி இரத்தம் எடுத்து இறந்தவனது எலும்பின்மேல் வைப்பார்கள். அது அப்பொழுது அந்த எலும்பினுள் ஊறி அழிக்கமுடியாதபடி ஆகிவிட்டால் அவன் வார்த்தை உண்மைதான் என்றும் ஜப்பான் தேசத்தினர் நம்பினர்.

இன்னும் ஒரு மனிதனது கைநகங்களும் அவனை இன்னானென்று நிரூபிக்க உதவி செய்கிறது. ஒளிபுகுந்து செல்லக்கூடிய மெல்லியதொரு எண்ணெயைக் கை நகங்களின் மேல் தடவி மைக்ராஸ் கோப்பின் உதவியால் பார்த்தால் அதில் கமாவைப்போன்ற பல நுண்ணிய துவாரங்கள் தென்படுகிறதாம். அவற்றின் தனி அமைப்பிலும் பொது அமைப்பிலும் எண்ணிக்கையிலும் காணப்படும் வித்தியாசத்தைக்கொண்டு ஒருமனிதனைக் கண்டுபிடித்து விடலாமாம்.

இவ்விதமே காதுகளின் அமைப்பிலிருந்தும் கண்களின் நிறத்திலிருந்தும் தலைமயிரின் வளைவுகளிலிருந்தும் பற்களின் அமைப்பிலிருந்தும் ஒவ்வொரு மனிதரும் வேறுபடுகின்றனர். அநேகமாக இவை ஒருவனுக்கு வம்ச பரம்பரையாகக் கிடைப்பவை. இவ்வகையான பலவகை ஆராய்ச்சிகளுடன் நாள்தோறும் வளர்ந்துவரும் விஞ்ஞான சாஸ்திரம் உண்மையான குற்றவாளிகளைக் கண்டுபிடிப்பதில் இணையிலா உதவி செய்கிறது. (சு-மி.)



---

### உடைகளுக்கு இருபது ஆயிரம் பவுன்

ரூத் சாட்டர்ட்டன் என்பவர் ஒரு பெரிய சினிமா ஸ்டார். 1931-ம் வருஷத்தில் அவர் உடைகளுக்காக மட்டும் 2031 பவுன் செலவழித்திருக்கிறார். கைக்குட்டைகளுக்கும் கோவணத்திற்குமாக 518 பவுன் செலவழித்துள்ளார்.

---

## நோட்டீஸ்

### சிவகெங்கை சப் கோர்ட்டு

**1935ளு S. C. No. 468.**

மீ. கா. மீறுங்கனி ருவுத்தார் } வாதி

துலுக்கர் பாளையம் மதாருசாரவுத்தர். } பிரதிவாதி.

ஷை கம்பரில் வாதி புரோ நோட்டுப்படி துகை வரப்பற்ற வியாஜ்ஜியம் செய்து பிரதிவாதிக்கு Substituted சர்வீஸ் மூலம் சமன் சார்வு செய்ய உத்திரவாகி 25—6—36உ க்கு வாயிதா போடப்பட்டிருக்கிறது. அகேஷ பணையுண்டானால் அன்று பகல்10 மணிக்கு ஷை கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக் கொள்ளலாம். தவறினால் ஷை கேசு எக்ஸ்பார்ட்டியாக தீர்மானமாகிவிடும்.

S. V. லெஷ்மணய்யர்,
வாதி வக்கீல்.

ஒரு சிறுகதை

# ப்ரேம—மணி

V. P. S.

(சென்றவாரத் தொடர்ச்சி)

மணிகுமாரி ஏறிச்சென்ற கப்பல் நடுக்கடலைக் கடந்துகொண்டிருக்கும் சமயம். இரவு சுமார் 2 மணியிருக்கும். ஒரே காரிருள். கருங்கடலும் காரிருளும் பயங்கரத் தோற்றத்தை உண்டாக்கின. கீழ்த்திசையில் இருந்து கிளம்பி வந்த கருமேகக் கூட்டமானது வான வெளியில் தெரிந்த நட்சத்திரக் கூட்டத்தையும் மறைத்துவிட்டது. கீழும் மேலும், நாற்றிசையிலும் ஒரே பேரிருள். கப்பலிலுள்ள ஜனங்கள் அயர்ந்து நித்திரை செய்துகொண்டிருக்கின்றனர். ஒரு அணுவளவு தவறினும் பேராபத்தை அளிக்கும் கருங்கடலின் நடுவே கவலையற்றுத் தூங்குகின்றனர் மக்களெல்லோரும்.

மணி 2-30 ஆகிவிட்டது. திடீரென்று ஒரே கூக்குரல். கடல் முழுதும் ஒரே கொந்தளிப்பு. கப்பல் நிலைகொள்ளாமல் அந்தக் கடைசிக்கும் இந்தக் கடைசிக்கும் குலுங்கி ஆடுகிறது. ஒரே பெரும்புயல். இப்பவோ பின்னையோ சற்று நேரத்திலோ என்றிருக்கிறது கப்பலின் கதி. திக்கற்ற பிரயாணிகள், குழந்தைகள், வயோதிகர்கள், கர்ப்பவதியான மணிகுமாரி புலம்புவதைத் தவிர வேறு வழியில்லாத நிலையில் அவர்கள் தவித்துக்கொண்டிருக்கின்றனர். ஒருமணி நேரமாக அடித்த புயலும் கொந்தளிப்பும் ஓய்ந்தபாடில்லை. ஜனங்கள் தங்கள் வாழ்க்கையில் நம்பிக்கை யிழந்துவிட்டனர். சொந்தக்காரரை நினைத்தனர் சிலர், மனைவிமக்களை எண்ணினர், சிலர் தாய்தந்தையரைக் கருதினர் சிலர், வீடுவாசலை சிந்தித்தனர் சிலர். ஒன்றோ அல்லது இரண்டோ நிமிஷங்களுக்கிடையில் தங்கள் உயிர் கடலில் கலக்கப்போவதாக அவர்கள் முடிவு செய்துவிட்டனர்.

“இஞ்சின் பக்கத்தில் ஏற்பட்ட வெடிப்பு அபாயகரமானதாகத்தான் இருக்கும்போலிருக்கிறது. அதை அடைக்க முடியவில்லை” யென்று பரபரப்புடன் கூறினன் உதவி காப்டன்.

“தண்ணீர் கப்பலினுள் ஏறுகிறது என்பதை நன்ருய்க் கவனி” என்று சொல்லிய காப்டன் ப்ரீமன் பாதுகாப்புப்படகுகளையெல்லாம் அவிழ்த்துவிடும்படி உத்திரவிட்டான். கப்பலில் இரண்டிஞ்சுக்கு மேல் ஜலம் பெருகிவிட்டதென்ற கூக்குரல் வானைப்பிளந்தது. ஜனங்களின் திகில் இன்னும் அதிகமாயிற்று. பிரக்ஞையற்றனர் பலர், புத்தியிழந்தனர் பலர். உயிரை மதியாது கடலில் குதித்தவர் பலர். கப்பலின் நிலை இவ்வளவு பயங்கர ஆபத்துக்கிடையில் காலைப்பரிதி கீழ்த்திசையில் அபயமளிப்பவன்போல் உதயமாயினன். புயல் சிறிது சிறிதாக அடங்கிற்று. காரிருளும் ஒடுங்கியது.

* * *

பினங்கு துறைமுகத்தில் ஒரே கும்பலாக இருந்தது. புயலில் அகப்பட்ட கப்பல் துறைமுகத்திற்கு பல நாட்கள் காலங்கடந்து வருவதையும் ஜனங்கள் பலர் பாதுகாப்புப் படகில் ஏறி வருவதையுங் காண ஜனங்கள் ஏராளமாகக் கூடியிருந்தனர். பாதுகாப்புப் படகுகளினின்றும் துறைமுகத்தில் இறக்கப்பட்ட பிரயாணிகளில் பலர் ஆபத்துக்கிடமான நிலைமையிலிருந்தனர். கர்ப்பவதியான பெண்ணொருத்தியின் நிலையைப்பற்றி நகரெங்கும் பேச்சுப் பரவிவிட்டது. அவள் இரண்டு நாளாக மயக்கமுற்றிருப்பதாகவும், அவளது நாடி தளர்ந்திருப்பதாகவும் டாக்டர்கள் கூறினர். ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு அவள் எடுத்துச் செல்லப்பட்டாள்.

மாதம் ஒன்ருயிற்று. பெண்ணின் தேக நிலையில் அபிவிருத்தி காணப்பட்டது. மேஜர் அட்லி இப்பெண்ணின் பராமரிப்பில் விசேஷக் கவனஞ் செலுத்தினர். இவளது முகத் தோற்றத்திலும் அமைதியிலும் அவளுக்கு விசேஷப்ரீதியுண்டாயிற்று. அவளுக்கு ஏற்பட்ட ஆபத்தில் இவருக்கு மிகுந்த அநுதாபமிருந்தது. பிரசவம் முடியும் வரை இங்கேயே இருக்கவேண்டுமென்று அந்த அம்மாளிடம் கூறினர். பிரத்தியேகமாக ஒன்றிரண்டு நர்சுகளை இந்த அம்மாளிடம் அவர் அமர்த்தியிருந்ததனுல் கர்ப்பவதிக்கு எந்தவிதமான சிரமங்களும ஏற்படவில்லை.

* * *

மாதம் ஒன்று கடந்தது. கர்ப்பவதியான மணிகுமாரி அழகிய ஆண்குழந்தையொன்றைப் பெற்ருள். ஆஸ்பத்திரியிலிருக்கும் அத்தனைபேரது பரிசுத்தமான அன்புக்கும் பாத்திரமாயிருந்த அவளது பிரசவம் எல்லோருக்கும் பேரானந்தத்தை விளைவித்தது. தங்கப் பதுமைபோன்றிருந்த அந்தக் குழந்தை யாவர் மனதையுங் கவர்ந்தது. ஆனல் குழந்தைக்குத் தாயாக ஆஸ்பத்திரியில் வாழும் அந்தப் பெண்ணணங்கு இந்த துர்ப்பாக்கிய சமூகத்தால் விதவைப் பட்டம் சூட்டப்பட்டிருப்பதை ஒருவரும் அறிந்திருக்கவில்லை. மணிகுமாரியின் உடம்பு தேற ஆரம்பித்தது. ஆஸ்பத்திரியில் இனி அவள் இருக்கவேண்டிய அவசியமில்லையென்ற நிலையும் ஏற்பட்டுவிட்டது. இனி அவள் நிலைமை என்ன? எங்கு செல்வது? தான் வந்திருக்கும் நோக்கத்தை அவள் நிறைவேற்றிக்கொள்ளவேண்டுமல்லவா? இதற்கு வழியென்ன! இதையெல்லாம் சிந்தித்த மணிகுமாரி ஆழ்ந்த கவலைக்கு உட்படலானுள்.

மேஜரின் அன்பை அவள் பூரணமாக அறிந்திருந்தாள். ஆகையினுல் அவரிடம் தனது குறையைச் சொல்லி நிவர்த்தி செய்துகொள்ளலாமா என்று அவள் யோசித்தாள்.

“இனி நீங்கள் ஆஸ்பத்திரியில் இருக்கவேண்டிய அவசியமில்லை. என்ன செய்ய உத்தேசம்?” என்ருர் மேஜர் அட்லி.

நிர்க்கதியால் பீடிக்கப்பட்டிருக்கும் அப்பெண்ணணங்கின் கண்களிலிருந்து நீர்த்துளிகள் வீழ்ந்ததைத் தவிர பதில் ஒன்றும் வரவில்லை.

“என்ன அம்மா? உங்களுக்கு இங்கு யாராவது சொந்தக்காரர்கள் இருக்கின்ருர்களா?”

“ஆமாம்—ஆனல் அவர் எங்கிருக்கிருரென்று எனக்குத் தெரியாதே. நான் எப்படி அவரையடைவேன்” என்ருள் அந்த விதவை.

“யார் அவர்? உங்கள் கணவரா? அவர் இருக்கும் இடம் தெரியாமல் நீங்கள் எப்படி இங்கு வந்தீர்கள்?”

“அந்த சோகக் கதையைக்கேட்டு நீங்களுமா வருத்தமடையவேண்டும்.”

“பாதகமில்லை சொல்லுங்கள்.”

அந்த சோகக் கதை ஆரம்பமாயிற்று. மேஜர் வார்த்தைவிடாமல் கேட்டுக்கொண்டிருந்தார். ஹிந்து சமூகத்தின் அக்ரமத்தை முதன் முதலில் இப்பொழுதுதான் அவர் அறிய நேர்ந்தது. இயற்கையான அந்த பச்சாத்தாபம் அவர் உள்ளத்தில் சூழ்ந்துகொண்டது. கண்களில் கருணை வெள்ளம் வழிந்தது.

சரி. நீங்கள் என் வீட்டில் சிலகாலமிருங்கள். நான் சிங்கப்பூருக்கு ஆளனுப்பி அவரை அழைத்துவர முயற்சிக்கிறேன்—ஆம்—அவர் பேரென்ன?—ப்ரேமநாதா. வயதென்ன இருக்கும்?” என்று கேட்டுக்கொண்டே டிரைவரையழைத்து அந்த அம்மாளை நமது வீட்டில் கொண்டுபோய் விடுத்து இந்த லெட்டரைக் கொண்டுபோய்க் கொடு” என்று உத்திரவிட்டார்.

சுமார் 28 இருக்கும் என்று மணிகுமாரி பதிலளித்துக்கொண்டே இளங்குழந்தையைக் கையிலேந்திக்கொண்டே விடைபெற்ருள்.

(தொடரும்)





# பத்ம—ராஜன்

N. S. S. தரன்

(ஏப்ரல் 9௳ தொடர்ச்சி)

நான்குபுரமும் ஒரே நெருப்பு—பத்மா, தலைவன், ராம், மூவருடைய உடைகளிலும் நெருப்புபற்ற ஆரம்பித்தது. அக்கொடிய நெருப்பிலிருந்து தப்பவழியறியாது தவிக்கலானுர்கள்.

பக்கத்துக் கூடாரத்திலிருந்த சாரணர்களெல்லாம் தலைவரின் கூடாரம் அக்கினிக்கிரையாவதைக் கண்டு, பரபரப்புடன் ஓடிவந்து நெருப்பை யணைப்பதற்கு பெருத்த முயற்சி எடுத்துக் கொண்டனர்.

½ மணி நேரத்திற்கு பின், நெருப்பை யணைத்துச் சிலர் கூடாரத்தி னுட்பிரவேசித்து மயக்குற்றுக் கிடக்கும், மூவரையும் வெளியில் தூக்கிவந்தனர். பின்,

அவர்களுடைய அபாய ஸ்திதியை யறிந்து, ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு கொண்டு செல்வதே நலமென்று நினைத்து அதி ஜாக்கிரதையாக கொண்டுவந்து ஆஸ்பத்திரியில், சேர்த்தனர்.

காலை மணி 10-க்கு சிறிது மயக்கம் தெளிந்து எழுந்தான் சாரணத் தலைவன். சாரணர்களெல்லாம் தம் தலைவனின் கவலைக்கிடமான நிலைமையைக் கண்டு பரிதவித்து நின்றனர். இந்த நிலையில், தலைவன் கண் விழித்துப் பார்த்தான். இதையறிந்த “ஜெயராமன்” என்ற சாரணன் தலைவனை யணுகி “தலைவரே! இப்பொழுது எப்படி இருக்கிறது” என்ருன்.

தலை:—ஜெயராம், ரணத்தால் உபாதை யதிகமாக இருக்கிறது. அந்தப் பெண்ணும், ராமும் எப்படி இருக்கிருர்கள் எவ்விதம், நெருப்புபற்ற ஆரம்பித்தது?

ஜெ:—தலைவரே! என்ன காரணத்தால் நெருப்பு பற்றியதென்பதை யறிய முடியவில்லை, நமது ராமுக்கு அதிக காயங்களொன்றுமில்லை, அப்பெண்ணின் நிலமை மட்டும் மிகவும் மோசமாக விருக்கிறது. இந்த ஆஸ்பத்திரியிலுள்ள கம்பவுண்டர்களில் ஒருவர் இப் பெண்ணையும் அவரின் பெற்ருேர்களையும் அறிவாரும், அவனுல் அப்பெண்ணின் பெற்ருேருக்கு விஷயம் அறிவிக்கப்பட்டு, அவர்களும் வந்திருக்கிருர்கள்.

தலை:—ஆ! அப்பெண்ணின் பெற்ருேர்கள் வந்திருக்கிருர்களா? நான் அவர்களைப் பார்க்கவேண்டும். அவரின் தற்கொலை முயற்சிக்குக் காரணமென்ன வென்பதை யறிய வேண்டும் என்று கூறி எழுந்து செல்ல முயன்ருன்.

ஜெ:—தலைவரே! வேண்டாம். இக் கேவல நிலையில் நீங்கள் அங்கு செல்லவேண்டாம். நான் வேண்டுமானுல் அவர்களை இங்கேயே அழைத்து வருகிறேன்.

தலை:—ஜெயராம்! இல்லை, நான் அவ்வளவு பலஹீனமான நிலைமையிலில்லை. தவிரவும் அப்பெண்ணின் துயரை யொழிப்பதற்கு தீவிர முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும் என்று ஒரே பிடிவாதமாகக் கூறிவிட்டு ஜெயராமனின் தோளில் சாய்ந்த வண்ணம் பத்மா படுத்திருந்த பக்கத்து அறையையணுகினுன். அப்போது பத்மா ஈனஸ்வரத்தில் யாருடனே கடிந்து பேசிக்கொண்டிருப்பதை செவியுற்று வெளியிலுள்ள சோபாவில் அமர்ந்து கவனிக்கலானுன்.

‘பெற்ருேர்களே! உங்களைப் பெற்ருேர்கள் என்று கூறவும், நினைக்கவும் என் நாவும், மனமும் அஞ்சுகின்றது. உங்களைப்போன்ற இழிந்த மனப்பான்மையுடையவர்கள் உலகிலிருக்கமுடியாதென்பது திண்ணம். பணத்திற்காசைபட்டு என்னை விற்றுவிடவும் துணிந்தீர்கள். நீங்கள் அவனை நம் வீட்டிற்கழைத்து உபசரித்துசெய்துகொண்ட ஏற்பாடுகளை எல்லாம் நான் மறைந்திருந்து கேட்டுக்கொண்டுதானிருந்தேன். இன்று என்னை மயக்கமடையச் செய்தோ வற்புறுத்தியோ என் கற்பை கேவலம் 600 ரூபாய்க்கு விற்றுவிடுவதனுல் உங்களுடைய பணக்கஷ்டம் தீர்ந்துவிடுமா? இவ்வித கேவலமான விஷயத்திலீடுபடுவதைத் தவிர பிராணனையே விட்டுவிடுவது மேலன்ருே?

என் மனக்கோவிலில் வீற்றிருக்கும் என் மன்னனை, என் அன்பனை, என் ராஜனை சந்தித்து சம்பாஷித்து வருவதையறிந்த நீங்கள். என்னை எவ்வளவு கடிந்துகொண்டீர்கள் ஊரார்அறிந்தால் ஜாதியைவிட்டு நீக்கிவிடுவார்களென்று கூறினீர்கள். ஆனல் விபசாரம் செய்வதற்கு மட்டும் இந்த ஜாதி எவ்விதம் இடங்கொடுக்கும். வேண்டும்போது ஜாதியை பிடித்துக்கொள்வது, வேண்டாத போது விலக்கித் தள்ளுவதுதான்முறையா? அப்படியானுல் ஏன் ஒரு ஜாதி கட்டுத்திட்டம் முதலியவற்றை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும்? போகட்டும். நானின்னும் அதிக நேரம் ஜீவித்திருக்கப்போவதில்லை. ஆனல் ஒன்று உங்களுடைய இக்கொடிய எண்ணங்களை எல்லாம் மாற்றி இனிமேலாவது உலகத்தாரிடம் ஒழுங்கான முறையில் நடந்து கொள்வீர்களென நம்புகிறேன்” என்று பத்மா அதிக பதட்டத்துடன் தன் பெற்ருேரிடம் கூறியதைக் கேட்ட தலைவன் தன் பெண்ணையே விபசாரம் செய்யும்படி தூண்டும் பெற்ருேர்களுமிருப்பார்களா என்று எண்ணினுன்.

அவள் கூறி வந்தவற்றை எல்லாம் செவியுற்ற பத்மாவின் தந்தைக்கு, துக்கம் அளவு கடந்தது......அவளின் ஒவ்வொரு சொல்லும் பல அம்புகளாக அவரது ஹிருதயத்தில் பாய்ந்தது.........தன் செய்கைகளை எல்லாம் நினைந்து கண்ணீர் வடித்தார்.

“ஹா! செல்வி! பத்மா!! உன்னுடைய அழிவிற்கு நானே காரணமாயிருந்தேன். நீ சிறு வயது முதல் காதலித்து வந்த உன் காதலன் “ராஜனை” யடைய வொட்டாமல் தடை செய்தேன். உன்னை வேறொருவனுக்கு மணமுடித்தேன். மறு வருஷத்தில் நீ விதவையானுய். பின்னும் உன் காதலனைச் சந்தித்து வார்த்தையாடுவதை யறிந்து தடை செய்தேன். அவன் படிப்பின் நிமித்தம் வெளிநாடு சென்றிருக்கும் போது அங்கிருந்து அவன் உனக்கெழுதிய கடிதங்களை எல்லாம் கிழித்தெறிந்ததுடன் நீ வைசூரியில் இறந்து விட்டதாகவும் அவனுக்கு கடிதமெழுதினேன. பின் பணத்தாசையால் ஒருவனிடம் உன்னை ஒப்புவிக்கவும் முற்பட்டேன். இந்த சமயத்தில் உன் காதலன் வெளிநாட்டிலிருந்து திரும்பி வந்திருப்பதை யறிந்து அவனைத் தொலைத்துவிட நினைத்து அவர்கள் காம்ப் போட்டிருந்த இடத்திற்குச் சென்று, அவனுடைய கூடாரத்தை நெருப்புக்கிரையாக்கினேன். நீ அங்கிருப்பாயென்று நான் கிஞ்சிற்றும் நினைக்கவில்லை. இப்பொழுது உன்னைக் கொலையும் செய்து விட்டேன்” என்று மேலும் கூற முடியாமல் தவிக்கலானுர்.

“அக்கூடாரத்திலிருந்தவர் என் காதலரா! ஐயோ! அடையாளமே தெரியவில்லையே. எங்கே அவர். அவரை அழைத்து வாருங்கள் நான்......பா...ர்...க்...க...வே...ண்...டும்......என்று கூறி தவித்தாள். சோர்ந்து படுக்கையில் விழுந்தாள்.........அவளின் உயிர் சிறிதாக தளர்ச்சியடைய ஆரம்பித்தது.

இதை எல்லாம் வெளியிலிருந்து கேட்டுக்கொண்டிருந்த சாரணத் தலைவன்; தன் உடல் நிலையையும் கவனியாது ஹா! காதலி! என் கண்ணே, என் கூடாரத்திலிருந்தவள் நான் ஆற்றின் பிரவாகத்தினின்றும் காப்பற்றியவள், என் பத்மாவா? கண்மணி உன்னுடன் நெருங்கிப் பழகியும், உன்னை அடையாளம் கண்டுகொள்ளமுடியாத பாவியானேனே. நீ இறந்துவிட்டாய் என்று உன் தந்தை எனக் கெழுதியது பொய்யா? உன்னை இந்த நிலைமையிலாகாண வேண்டும் என்று பிரலாபித்த வண்ணம் ஓடி கட்டிலில் கிடக்கும் பத்மாவைச் சேர்த்தணைத்துக்கொண்டான்.

“பத்மா! இதோ பார் உன் காதலன் வந்திருக்கிறேன. எங்கே! எங்கே! உனது நீல விழிகளால் என்னை ஒரு முறை பார் என்று கெஞ்சினுன். பத்மா கண்விழிக்கவோ பேசவோவில்லை யாகையால் மீண்டும் பல முறை யழைத்தான் பதிலில்லை. கூர்ந்து நோக்கினுன். அப்பொழுதுதான் சுவாசம் நின்று வெறுங்கட்டையாகக் கிடப்பதையறிந்தான். “ஹா பத்மா இறந்தா போய்விட்டாய்”

என்று கூறி படாரென்று அவள்மேல் விழுந்தான்......

சிறிதுகாலம் சென்றது. சோகத்தால் சோர்ந்துபோன அந்த ஆண்பறவை பெண்பறவை இருக்குமிடத்தையே தேடிச் சென்றது.



## நோட்டீஸ்

தேவகோட்டை
சப் கோர்ட்டு

S. C. No. 67 of 1936.

கண்டனூர் கு. அரு. மு. அருணுசலம் செட்டியார் } வாதி

உஞ்சனை சேகரம் ஊவயலிலிருக்கும் தம்பான் ராமனம்பலகாரன் மகன் த. ராம. கருப்பய்யாம்பலம். } 5-வது பிரதிவாதி

ஷை 5-வது பிரதிவாதிக்கு அறிவிக்கிறதாவது.—

கண்டனூர் ராமசாமி செட்டியார் மகன் லெட்சுமணன் செட்டியாருக்கு தாங்கள் வகையரு பேர்கள் ரூ. 200க்கு எழுத்திக்கொடுத்திருக்கிற புரோ நோட்டை வாதி மேடோவர் பெற்று தொகையை வாப்பற்ற வியாஜ்யம் செய்து 27—6—1936-ந் தேதி வாய்தா ஏற்பட்டிருப்பதில் தங்களுக்கு ஷை கேசு விஷயமாக ஆக்ஷேபனையிருந்தால் வாயிதாவில் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளலாம்.

R. Krishna Ayyangar,
வாதி வக்கீல்.

தேவகோட்டை, 15—4—36.

## புதிய காங்கிரஸ் காரியக் கமிட்டி

### அங்கத்தினர்கள் விபரம்

லக்ஷ்மணபுரி, ஏப் 17

பண்டித ஜவஹர்லால் நேருவால் ஏற்படுத்தப்பட்டிருக்கும் புதிய காங்கிரஸ் காரியக் கமிட்டியில் பின் வருபவர்கள் அங்கத்தினர்களாயிருப்பார்கள்.

1, சேத் ஜமுனுலால் பஜாஜ் (பொக்கிஷதார்)
2. ஆச்சாரியா ஜே. பி. கிரிபாலினி (பொதுக்காரியதரிசி)
3. மௌலானு அபுல் கலாம் அஸாத்
4. பாபு ராஜேந்திர பிரசாத்
5. சர்தார் வல்லபாய் படேல்
6. கான் அப்துல் காபர்கான்
7. திரு. சி. ராஜகோபாலாச்சாரியார்
8. திரு. சுபாஷ் சந்திர போஸ்
9. திரு. நரேந்திர தேவ்
10. திரு. ஜெயராம் தாஸ் தௌலத்ராம்
11. திரு. எஸ். டி. டி. தியோ
12. திரு. ஜெய் பிரகாஷ் நாராயணர்
13. திரு. புலாபாய் தேசாய்
14. திரு. அச்யுதா பட்டவர்த்தன்

கான் அப்துல் காபர்கான் சிறையிலிருக்கும் வரையில் டாக்டர் கான் சாகிப் அவருக்குப் பதில் காரியக்கமிட்டி அங்கத்தினராய் இருந்துவருவார்.

### ஏப்ரல் கடைசியில் கூட்டம்

திரு. ஜவஹர்லால் நியமிக்கப்பட்டிருக்கும் புதிய காரியக்கமிட்டி இம்மாதக் கடைசியில் கூடுமென்று தெரிகிறது. கூடும் இடம் இன்னும் நிச்சயமாகவில்லை.

## அடிஷனல் சப் ஜட்ஜிற்கு பிரிவுபசாரம்

(நமது நிருபர்)

தேவகோட்டை வக்கீல்கள் சங்க அங்கத்தினர்கள் ஸ்ரீவில்லிபுத்தூருக்கு ஜில்லா முன்சீபாக மாற்றிப்போகும் தேவகோட்டை அடிஷனல் சப்ஜட்ஜ் ஸ்ரீமான் எல். எஸ். பார்த்தசாரதிஅய்யர் அவர்களுக்கு கோர்ட்டுக் கட்டிடத்தில் ஒரு பிரிவுபசார விருந்து 17-4-36உ மாலை 5 மணிக்கு நடத்தினர்.

தேநீர் விருந்திற்குப் பின் புகைப்படமெடுக்கப்பட்டதும் பிரதம விருந்தினருக்கு மாலை யணிவிக்கப்பட்டது. வக்கீல் இளைஞர்களின் சார்பில் ஸ்ரீமான் எம். ஆர். கிருஷ்ணசாமி அய்யங்காரும், வயது சென்ற வக்கீல்களின் சார்பில் ஸ்ரீமான் பி. ராமசாமி அய்யரும், மாற்றிப்போகும் சப் ஜட்ஜ் அவர்களின் அரிய குணதிசயங்களைப்பற்றி விரிவாக எடுத்துரைத்து பார்த்தசாரதி அய்யரவர்கள் தேவகோட்டைக்கு கூடியசீக்கிரம் பிரின்ஸிபல் சப் ஜட்ஜாக நியமனமாகி வரவேண்டுமெனக் கடவுளைப் பிரார்த்திப்பதாகக் கூறினர்கள்.

சப்ஜட்ஜ் அவர்கள் பதிலளிக்கையில் வக்கீல் இளைஞர்கள், செட்டிநாட்டுப் பழக்க வழக்கங்களில் நல்ல தேர்ச்சி பெற வேண்டுமென்றும் ஷை பழக்க வழக்கங்களைப் பற்றி புத்தகம் வெளியிடப்பட்டால் அவர்களுக்கு மிக்க உபயோகமாக இருக்குமென்றும், செட்டியாரவர்கள் செய்கோன் முதலிய பிரஞ்சு நாடுகளில் இருப்பதால் வக்கீல் இளைஞர்கள் பிரஞ்சுப் பாஷையில் தேர்ச்சி பெற வேண்டும் என்றும், ஷை பாஷையைக் கற்றுக் கொள்வதால் அவர்களுடைய வரும்படி இன்னும் அதிகமாகலாமென்றும் பேசினர்கள்.

ஸ்ரீமான் டி. ஜி. ராமசாமி அய்யங்கார் முடிவுரையில் சப்ஜட்ஜ் அவர்கள் உத்தியோகமேற்றுக்கொண்ட நாளாக வக்கீல்களுடன் மிக்க உற்சாகத்துடன் பழகி வந்திருக்கின்ருரென்றும் கோர்ட்டில் உற்சாகமாக இருப்பதோடல்லாமல் பொதுவாகவுள்ள சங்கங்களிலும் உற்சாகத்துடன் உழைத்து வந்திருக்கிறார்களென்றும் கூறினர்.

## ஸ்பெயினில் வேலை நிறுத்தம்

### தொழிலாளர் கோரிக்கை அங்கீகாரம்

ஸ்பெயினிலேற்பட்ட வேலை நிறுத்தம் 17உ நள்ளிரவில் தீர்ந்தது. காலவரையறையின்றிப் பொதுவேலை நிறுத்த மேற்பட்டு விடுமோவென்று பயந்து தீவிர வாதிகளின் கோரிக்கைகளையெல்லாம் சர்க்கார் ஏற்றுக்கொண்டு விட்டார்கள். பாஸிஸ்டுகளுக்கு எதிராகக் கடுமையான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள வேண்டுமென்பது இவர்கள் கோரிக்கை.

24 மணி நேரம் நடைபெற்ற வேலை நிறுத்தம் காரணமாகப் போக்கு வரவும் வியாபாரமும் வெகுவாகப் பாதிக்கபட்டு விட்டது. காலையில் மந்திரி சபை கூடியது. பாஸிஸ்டு சங்கங்களெல்லாம் சட்ட விரோதமானவை யென்று அறிவிக்கப்பட்டது.

போலீஸ் அதிகாரி ராஜிநாமாச் செய்துவிட்டார். இவர் ஸ்தானத்தில் ஒரு அபேதவாதி நியமிக்கப்படுவார். பாஸிஸ்டு இயக்கத்தில் அநுதாபம் கொண்ட போலீசாரெல்லாம் நீக்கப்படுவர்.

இதுவரை 180 பேர் கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

## கோவில்களில் கன்னமிடும் திருடனுக்கு 18 மாதம்

நெடுநாட்களாக கோவில் விக்கிரகங்களை அப்புறப்படுத்தி அதன் கீழுள்ள தங்கத் தகடுகளைத் திருடிவந்த குன்றக்குடி வீரப்பன் என்பவன் சென்ற மாதத்தில் தேவகோட்டை இரவசேரிக்கோவிலுக்குள் புகுந்து அம்மன் கழுத்திலிருந்த தாலியைத் திருடியதாக தேவகோட்டைப் போலீசாரால் தேவகோட்டை ஜாயிண்டு மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் தொடுக்கப்பட்டிருந்த வழக்கில், கனம் ஜாயிண்டு மாஜிஸ்ட்ரேட் அவர்கள் 18-3-36 தேதி எதிரியைக் குற்றவாளியெனத் தீர்மானித்து, எதிரி இதற்கு முன் பல தடவைகளில் தண்டனையடைந்திருப்பதை உத்தேசித்து எதிரிக்கு 18 மாதம் கடுங்காவல் தண்டனை விதித்தனர்.

## கண்டரமாணிக்கம்

### வருஷப்பிறப்பு உற்சவம்

கண்டரமாணிக்கம் மெ- பெரி. பெரி. தர்மகலாசாலை மாணவமாணவிகள் சித்திரை வருஷப்பிறப்பாகிய (14-4-36) சுபதினத்தை முன்னிட்டு அன்று இரவு 9 மணி முதல் 12 மணி வரை புண்ணிய பாரதம் கதையின் ஓர் பாகமாகிய நச்சுப்பொய்கை படலம் என்ற சரித்திரத்தை நாடக ரூபமாய் நடித்துக் காண்பித்து சபையோரை மிகவும் ஆனந்திக்கச் செய்தார்கள். இறுதியில் ஷை கலாசாலை மானேஜர் ஸ்ரீமான் மெ. பெரி. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள் ஆக்டர்களுக்கு வெள்ளி மெடல் பரிசு வழங்கக் கூட்டம் இனிது நிறைவேறியது.

அன்று இரவு ஸ்ரீ மாணிக்க நாச்சி அம்மாள் சுவாமி புறப்பாட்டுக்கு அவ்வூர் வர்த்தகர்கள் அபிஷேக ஆராதனைகள் செய்வித்து அங்கப்பன் நாதசுரம் வாணக்காக்ஷி முதலிய வைபவங்களுடன் திருவுலாக்காக்ஷியும் சிறப்பாக நடைபெற்றது.

## பிரம்மஞான சங்கங்கள் மகாநாடு

(நமது நிருபர்)

தேவகோட்டை, ஏப் 20உ.

இராமனதபுரம் ஜில்லா பிரம்மஞான சங்கங்களின் 1936-வது வருட மகாநாடு தேவகோட்டை வக்கீல் பி. ராமசாமி அய்யர் அவர்கள் இல்லத்தில் சென்ற 18, 19 தேதிகளில் அடிஷனல் சப்ஜட்ஜ் ஸ்ரீமான் எல். எஸ். பார்த்தசாரதி அய்யர் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. ஜில்லாவின் பல பாகங்களிலிருந்தும் சென்னையிலிருந்தும் 16 பிரதிநிதிகளும் தேவகோட்டைப் பிரமுகர்களில் சுமார் 100 பேர்களும் விஜயம் செய்திருந்தனர். அயலூரிலிருந்து விஜயம் செய்த பிரதிநிதிகளுக்கு வேண்டிய சௌகரியங்கள் செய்து வைக்கப்பட்டிருந்தன.

அநேக மதங்களின் பிரார்த்தனைகளுடன் மகாநாடு 18உ ஆரம்பமாயிற்று. பிரம்மஞான சங்கத் தலைவர் ஸ்ரீமான் டாக்டர் அருண்டேல் அவர்களின் வாழ்த்துச் செய்தியை தலைவர் வாசித்ததும் அடையார் ஸ்ரீமான்கள் எம். சுப்பிரமணியம், எம். சுப்பிரமணிய அய்யர் ஆகியவர்கள் பிரம்மஞானம், சங்கம் இவைகளின் அவசியத்தைப் பற்றி சொற்பொழிவாற்றினர்கள். ஸ்ரீமான் M. சுப்பிரமணிய அய்யர் பேசுகையில் வர்ணாச்ரம் தர்மம் ஒரு தனிப்பட்ட ஜாதியினருக்கு மாத்திரம் ஏற்பட்டதல்ல வென்றும், வர்ணாச்ரம தர்மத்தின் தத்துவத்தைக் குறுகிய நோக்கத்துடன் ஒரு சில சனதனிகள் அனுஷ்டித்து வருவது கண்டிக்கத்தக்க தென்றும் கூறினர்.

தலைவர் பார்த்த சாரதி அய்யர் அவர்கள் மகாநாட்டைத் திறந்துவைத்து பிரம்மஞான சங்கத்தின் அவசியம் அதன் உயரிய லக்ஷியம் இவைகள் பற்றி விரிவுரை நிகழ்த்தினர்கள்.

மாலை 3-30 மணிக்கு மதுரை வக்கீல் A. ரெங்கசாமி அய்யர் அவர்கள் பெண்களுக்குப் பிரத்தியேகமாக ஒரு உபன்னியாசம் செய்தனர்.

மாலை 5 மணிக்கு சப்கலெக்டர் ஸ்ரீமான் M. P. பாய் அவர்கள் தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் சென்னை ஸ்ரீமான் P. K. ராஜகோபாலன் அவர்கள் பிரம்மஞான சங்கங்கள் நிறுவப்பட வேண்டிய அவசியம் பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தியதும் தலைவரவர்களின் அரிய குறிப்புகளுடன் பொதுக்கூட்டம் முடிவுற்றது.

இரவு விருந்து நடைபெற்றதும் அரியக்குடி ராமானுஜமய்யங்காரின் சிஷ்யர் தேவகோட்டை சீனு அய்யங்காரின் பாட்டுக் கச்சேரியுடன் முதல் நாள் மகாநாடு முடிவடைந்தது.

19உ காலை பிரம்மஞான சங்கப் பிரார்த்தனைகள் நடந்தபின்னர், பிரம்மஞான சம்பந்தமான சம்பாஷணைகள் பல நிகழ்த்தப்பட்டன. பின்னர், ஜில்லாப்பிரதிநிதிகள் காலை 9 மணிக்கு காரைக்குடி ரயில்வே ஸ்டேஷனுக்குப் புறப்பட்டுச்சென்று சிலோன் போட் மெயிலில் கொழும்பு மார்க்கமாக ஐரோப்பாவிற்குப் பிரயாணமாகும் பிரம்மஞான சங்கத்தலைவர் டாக்டர் அருண்டேல், ஸ்ரீமதி ருக்மணி அருண்டேல் ஆகியவர்களின் கோஷ்டியாரைச் சந்தித்து தலைவரவர்களுக்கு தக்கமரியாதைகளைச் செலுத்தினர்.

18உ நடைபெற்ற காரியக் கமிட்டிக் கூட்டத்தில் நிறைவேறிய தீர்மானங்களில் முக்கியமாவன:—

தமிழ்நாடு பிரம்மஞான ஐக்கிய சங்க உப தலைவர் திரு. வி. வி. கிருஷ்ணசாமி அய்யரின் மரணத்திற்கு அனுதாபம் தெரிவிக்கப்பட்டது.

தலைவர் டாக்டர் அருண்டேல் அவர்களுக்கு ஜில்லாப் பிரதிநிதிகளின் விஸ்வாசத்தைத் தெரிவித்துத் தீர்மானம் நிறைவேறியது.

தேவகோட்டையிலும் அதைச் சுற்றியுள்ள கிராமங்களிலும் ஹரிஜனங்களின் கஷ்டங்களை நிவர்த்தித்து ஜாதி ஹிந்துக்களுக்கும் ஹரிஜனங்களுக்கும் ஒற்றுமை ஏற்படுத்தவும், ஷை இடங்களில் கிராமப் புனருத்தாரண வேலையை ஆரம்பிப்பதற்கும் தேவகோட்டை பிரம்மஞான சங்கத்திற்கு இம்மகாநாடு அதிகாரமளிக்கின்றது.

இராமநாதபுரம் குருப் காரியதரிசி அவர்களுக்கு பழைய சங்கங்களைப் புதுப்பித்தல் புதிய சங்கங்கள் அமைத்தல் இவை சம்பந்தமாக உதவிபுரிய கமிட்டி ஒன்று நியமனம் செய்யப்பட்டது.

தேவகோட்டைபிரம்மஞான சங்கத்திற்கு டி. ஜீ. ராமசாமி அய்யங்கார் காரியதரிசி எஸ். சிவசுப்பிரமணியம் பொக்கிஷதார். லைப்ரேரியன் ஆக தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

இம்மகாநாடு தேவகோட்டைக்கு முதல் மகாநாடாக இருந்தபோதிலும் யாதொரு கஷ்டமுமின்றி மிக்க வெற்றிகரமாக முடிந்தது குறிப்பிடத்தக்கது.

## அரசர் அழைக்கவில்லை

### ஜவஹர்லால் மறுப்பு

எட்வர்ட் அரசர் தன்னை அந்தரங்கக் காரியதரிசி மூலம் பார்க்க வரும்படி அழைத்ததாகவும் அவ்வழைப்பை ஏற்றால் இந்திய அரசியலில் சிக்கலேற்படுமென்று பயந்து தாம் மறுத்துவிட்டதாகவும் வெளியான செய்தியை ஜவஹர்லால்நேரு மறுத்து ஒரு அறிக்கைவெளியிட்டுள்ளார். இது ஒரு பொய்க்கதை என்று அவர் கூறுகிருர்.

## ஒரு குருடரின் சாமார்த்தியம்.

### குதிரையின் எஜமான விஸ்வாசம்

அகால்பந்த் என்பவர் இரண்டு கண்களும் தெரியாத ஒரு குருடர். அவருக்கு வயது 93. அவர் ஒரு பெண் குதிரையை வளர்த்து வருகிருர். அவருடைய உறவினர்களைக் காட்டிலும் அது தனது எஜமானருக்கு அதிக ஊழியம் செய்கிறது. அவர் கூப்பிட்டவுடனே குதிரை வருகிறது. போக வேண்டிய இடத்தைச் சொன்னல் அங்கே அந்தக்குதிரை போகிறது. அவரைத் தன் முதுகில் ஏற்றிக்கொண்டு போகவேண்டிய இடத்துக்குச் செல்லுகிறது. வேண்டியதைக் கொண்டுவந்து தருகிறது. தன் எஜமானரைத் தவிர வேறு யாரையும் சுமப்பதில்லை.

## அஞ்சனமா வஞ்சகமா?

### கிராமவாசிகள் ஏமாற்றம்

ஸ்ரீவில்லிப்புத்தூரைச் சேர்ந்த மாடசாமி ஆசாரி என்பவன் உசிலம்பட்டி முதலிய பல கிராமங்களுக்குச் சென்று அங்குள்ளவர்களிடம் தனக்கு மாந்திரீக சக்தியுண்டென்றும், தான் கொடுக்கும் ஒருவித அஞ்சனத்தை (மையை)க் கொண்டு எவரையும் வசப்படுத்தவோ கெடுத்துவிடவோ இயலுமென்றும் கூறிப் பலரிடமிருந்து ஏமாற்றிப் பணத்தைப் பறித்ததாகத் தெரிகிறது. ஏராள ஜனங்கள் இவனுடைய வார்த்தையில் மயங்கி கணக்கற்ற பணத்தைக் கொடுத்தனர். அவன் குறிப்பிட்ட காலம் வரை பார்த்தும் அந்த அஞ்சனத்தால் எவ்வித பயனுமேற்படாததால் கிராம ஜனங்கள் போலீசாரிடம் தெரிவித்துக் கொண்டனர். அந்த ஆசாரி இப்பொழுது கைதியாயிருக்கிருன்.

## லட்சக்கணக்கான நூல் நஷ்டம்

### லையால்பூரில் தீ விபத்து

இவ்வூரிலுள்ள பருத்தியைக் கொட்டை எடுத்து பேல் கட்டும் ஆலையில் தீ விபத்து ஏற்பட்டது. போலீஸாரும் முனிஸிபல் தீ யணைக்கும் படையினரும் பாடுபட்டும் தீயை அணைக்க முடியவில்லை. 4 மணி நேரம் தீ எரிந்தது. லட்சக்கணக்கான நூல் நஷ்டமேற்பட்டிருக்கிறதாம்.





## சிரிப்பின் தத்துவங்கள்

(திருவையாறு, திரு. டி. ஆர். ராஜகோபாலன்.)

பரந்த இந்நிலவுலகின் கண்ணே பிறந்துள்ள மக்களனைவரும் துக்கத்தை வெறுத்துச் சந்தோஷத்தை விரும்பி நிற்கும் தன்மையையுடைத்தாயிருக்கிருர்கள் என்பது யாவருமறிந்ததே. சந்தோஷமெனினும் ஆனந்தமெனினும் பொருந்தும். 'ஜனங்கள் யாவரும் சந்தோஷத்துடன் கூடிவாழ வேண்டுமென்பதே என் கோரிக்கை' என்று நம்மிடம் கூறிய பொதுநலங்கருதும் தன்மைவாய்ந்த நண்பர்கள் பலராவர். சுயநலங் கருதும் சுபாவமுடைய ஒரு சிலரும் தாங்கள் மட்டிலுமாவது சந்தோஷமாய் இருக்கவேண்டும் என்பதாகக் கருதுவரே யன்றி வேறில்லை என்பதும் திண்ணம். ஆகவே, சந்தோஷத்தை விரும்பாதவர் இவ்வுலகிலொருவருமில்லை என்றே கூறலாம்.

சிரிப்பென்பது பல்வேறு உணர்ச்சிகளின் காரணமாக ஏற்படும் தன்மையுடையதாய் இருப்பினும், பொதுவாய் சந்தோஷத்திற் கடையாளமாகவே பெரும்பாலும் தோன்றும் இயற்கையுடையதாய் இருப்பதுபற்றிச் 'சிரிப்பை' 'ஆனந்தத்திற்கு அறிகுறி' என்று விவரிக்கலாம்.

அளவுக்கு மிஞ்சிய ஆனந்தம் பொங்கியெழும் காலையில், அதனை அடக்கி மனதை மற்றென்றின் பால் செலுத்துவதென்பது மக்களால் ஆகாத காரியமேயாகும். ஆகவே, மனம் மகிழ்வுற்று அம்மகிழ்ச்சி அடக்கத்தகாத அளவு பெருகிக் கொண்டிருக்கும் சமயத்தில் அதை வெளிப்படுத்திச் சிரித்தால்தான் மனம் சாந்தியடையும்.

சந்தோஷ உணர்ச்சி, தோன்றியது முதல் க்ஷணந்தோறும் கொஞ்சம் கொஞ்மாய்த் திடீர் திடீரென ஆச்சரியப்படத்தக்கதாய் அதிகரிக்கும் தன்மை பெற்றது; எல்லையற்றது. அதன் அளவு, தன்மை, நீடித்திருக்கும் காலம் முதலியன நிதானிக்கக் கூடியதில்லை.

அச்சந்தோஷ உணர்ச்சியை வெளிப்படுத்திக் காட்டவும், அதிகரிக்காமல் கட்டுப்படுத்தவும், அதைச் சிறிது சிறிதாய் மட்டுப்படுத்தவும் இன்றியமையாதது சிரிப்பேயாகும். சிரிப்பென்றொன்றிராவிடில், மிருந்த மகிழ்ச்சியால் விளையும் இன்னல்கள் எண்ணிலடங்காவென்பது சற்று ஆலோசித்தால் நன்கு விளங்கும். மதித்தற்கரிய அளவு மகிழ்ச்சி வந்தெய்தியக்கால் அதனைப் பொருக்கச் சக்தியற்ற மக்கள் பலர் ஹிருதயங்கள் வெடித்து மாய்கின்றனர் என்று நாம் கண்டும் கேட்டும் அறிந்திருப்பதும் இதற்குத் தக்க சான்ருகும்.

அத்துணைச் சிறப்புடன் விளங்கும் சிரிப்பை மக்கள் பலரும் சதா காலமும் பெற்று மகிழ்வடையச் செய்வதே தங்கள் கடமையெனப் பூண்டு 'ஹாஸ்யம்' என்பதனை அடிப்படையாக அடைந்து வெளி வந்துலவும் பல பத்திரிகைகளும் 'சிரிப்பின் தத்துவங்கள்' பற்றிக் கூறமுன் வந்ததாய்க் காணேம். ஹாஸ்யக் கட்டுரைகளும் கதைகளும் எழுதப் புகுந்துள்ள நேயர்களின் கருத்துக்களும் அத்திசையில் செல்லாததின் காரணமும் அறிகிலேம்.

சிரிப்பை இயற்கைச் சிரிப்பென்றும் செயற்கைச் சிரிப்பென்றும் இரண்டாகப் பிரிக்கலாம்.

மக்களொவ்வொருவருக்கும், சரீரம், உடலின் அமைப்பு, தேகத்தின் நிறம் முதலியனவைகள் அமைந்திருப்பது போன்று சிரிக்கும் தன்மையும், விதமும் ஏற்பட்டே யுள்ளன. அத்தகைச் சிரிப்பே இயற்கைச் சிரிப்பாகும்.

சிலர், தாங்கள் சிரிக்கையில், தங்களுடைய முகங்களின் இயற்கையான அழகு பாதிக்கப்பெற்றுக் குறைந்து காணப்படுமோ வென ஐயமுற்றுச் சுபாவமாகவே அவரவர்களுக் கென்றேற்பட்டுள்ள இயற்கைச் சிரிப்பினை மறைத்து மற்றொரு விதமான சிரிப்பைக் கைக் கொள்ளுகின்றனர். இதுவே செயற்கைச் சிரிப்பாகும்.

அவைகளுள் இயற்கை அழகுக்கொப்ப இயற்கைச் சிரிப்பே மேலானதாகும். செயற்கைச் சிரிப்பு இயற்கையழகைக் கெடுத்துவிடும் தன்மை வாய்ந்தது. அதனுண்மையை, அதனைக் கையாளும் பலரறியாவிடினும் பிறர் காண்பர். தன் முகத்தைத் தான் பார்த்துத் தெரிந்து கொள்ள இயலாததே அதற்குக் காரணம். எனினும் கண்ணடி முதலிய வஸ்துக்களின் முன்னிலையில் நின்று அவர்களே நோக்கின் உண்மை ஒரு சிறிதளவாவது விளங்கலாகும்.

மேலும் சிரிப்பு முகத்தின் அழகினையும் வசீகர சக்தியையும் அதிகப்படுத்தக் கூடிய ஆற்றலுள்ளது. சினிமா உலகில் பிரக்யாதி பெற்று விளங்கா நிற்கும் அமெரிக்கன் டக்ளஸ்பேர்பாங்ஸ், இந்தியன் டக்ளஸ் என்னும் இளைஞன், வித்தல் ஆகிய இவர்கள் போன்ற பல நடிகர்களின் முகவசீகரமும், அழகும் மக்களால் பெரிதும் போற்றப்படுவதற்கு அன்னோர்களின் அழகுவாய்ந்த சிரிப்பே காரணம் என்பதை யாரால் மறுக்கமுடியும்?

'சிரிப்பினுல் குடியையும் கெடுக்கலாம்' என்ற ஒரு தமிழ்ப் பழமொழியும் உண்டு. அதன் உண்மையான கருத்து யாதெனில், சிரிப்பினுல் சித்தியாகாத காரியம் இவ்வுலகில் எதுவுமில்லை என்பதேயாகும். சாம பேத தான தண்டமெனப்படும் நான் முறைகளாற் கைகூடாத ஒன்றினைச் சிரிப்பினுல் செய்து முடிக்கலாம். பெரியதோர் சேனையினுற் ருேல்வியுறச் செய்ய இயலாத ஒருவனைச் சிரிப்பினுல் வெல்லலாம். 'சிரிப்பினுல் மயங்காதவர் உலகில் ஒருவருமிலர்' என்பதே அதற்குக் காரணமாகும்.

சிரிப்பில் பலவகைகள் உள. அதில் ஆச்சரியத்தை விளைவிக்கத் தக்க பல விஷயங்களும் அடங்கியிருக்கின்றன.

பொதுவாய்க் குழந்தைகள் பிறந்து ஒன்றரை அல்லது இரண்டு வருடங்களுக்குப் பின்னர் தான், பற்கள் முளைக்கப் பெறுகின்றன. அது வரையில் அவர்கள் சிரித்தால், பொக்கை வாயே தென்படும். ஆகையால், அதற்குப் பொக்கை வாய்ச் சிரிப்பென்று பெயர். பொக்கை வாய்ச் சிரிப்பு பார்க்க மிக அழகாய் இருக்கும். வயது முதிர்ந்த பெரியோர்களும் தங்களுடைய பற்களை இழந்த பின்னர் இவ்வகைச் சிரிப்பையே கைப்பற்ற வேண்டியவர்களாகின்றனர்.

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

வாழ்த்துப் பாட்டுடன் விழாத்துவங்கியது. மாணவ மாணவிகள் மிகச் சிறந்த முறையில் பல சம்பாஷணைகள், பாட்டுகள், முதலியன நடத்தினார்கள். இலக்கண சம்பாஷணையொன்று மிகச் சுவையானதாக இருந்தது. கலாசாலைகளில் இலக்கணத்தினுல் கஷ்டப்படுத்தும் பான்மையையும், மாணவர்கள் நிர்ப்பந்தமாக அதில் மனமற்றுப் பழகும் பண்பையும் விளக்கும் அப்பிரசங்கம் யாவரையும் மகிழச் செய்தது. பின்னர் சாஸ்வதி வித்தியாசாலை மாணவ மாணவிகளில் 2-வது பெண்கள் சீர்திருத்த மகாநாடு நடத்திக் காட்டப்பெற்றது. அம்மகாநாடு சுமார் 2 மணிநேரம் மிக அமைதியாக—சிறந்த முறையில் நடந்து தீர்மானங்கள் பல கொண்டுவருவதும், அதற்கு ஆட்சேப சமாதானங்கள் கூறுவதும், ஓட்டெடுப்பதும் போன்ற விஷயங்களை மாணுக்கியர் திறமையாக நடித்துக்காட்டினர். இது எதிர்காலத்தில் அவர்களுக்குத்தகுந்த துணையாகவும் உதவியாகவும் இருக்குமென்பதில் சந்தேகமென்ன?

இம்மகாநாட்டில் கலந்துகொள்ளவேண்டுமென்று தலைவரவர்களை மாணுக்கியர் கேட்டுக்கொண்டதற்கு ஏற்பதக்கவாறு பதிலளித்துப்பாராட்டினார்கள்.

பின்னர் மாணுக்கிகளால் கிருஷ்ணலீலாவில்ஒரு பகுதிஅதியற்புதமாகபக்கவாத்தியங்கள் உயர்ந்த உடைகள் முதலியவற்றுடன் நடித்துக்காட்டப்பெற்றது.

பின்னர் திருச்சி தோழர் லீலாவதியவர்கள் இந்தியப் பெண்களின் நிலை என்பது குறித்துப் பேசினார்கள். (அது பின்னர் வெளியாகும்.)

இதில் கிருஷ்ணனாக நடித்த சிறுமி கரு. சீதாலட்சுமியை ஜனங்கள் விசேஷமாகப் பாராட்டினார்கள். நாடகம், மகாநாடு, இதர பாட்டு பேச்சு நடிப்பு முதலியவைகள் இவ்வருஷம் சென்ற ஆண்டைக் காட்டிலும் மிகவும் நன்ருக இருந்தது. இதற்கு திருவாளர் S. P. வீரப்பா அவர்களின் முயற்சி பெரிதும் காரணமென்பது குறிப்பிடத்தக்கது.

## புதுவயலில் ஆண்டு விழா

பின்பு தலைவரவர்கள் முடிவுரை கூறினார்கள். அதன் சாரம் வருமாறு:—

மாணவர்கள் நடித்த பலமுக்கியமான அம்சங்களினுல் நாம் இதுவரை மகிழ்ந்திருந்தோம் இதையெல்லாம்கவனித்தபொழுது ஒரு நாளைக்கு 24 மணிநேரத்திற்கு அதிகமாக ஏன் இருக்கக்கூடாது என்ற எண்ணம் தோன்றுகிறது. நான் பல கலாசாலைப்பட்டங்களை யெல்லாம் பெற்றவன். எத்தனையோ ஆண்டுகள் கலாசாலைகளிலேயே கிடந்து உழன்றவன். ஆனுல் இன்றைய நிகழ்ச்சியைக் கவனிக்கும் பொழுது நான் ஏன் இன்னும் சிறுவனுக இருந்திருக்கக் கூடாது என்று தோன்றுகிறது. சர்வகலாசாலைகள் நமது கலையுணர்ச்சியைக் கொலைபுரிந்துவிட்டன. நமது ஆத்மீகச் சிறப்பு மாய்ந்துவிட்டது. ஆகவே புஸ்தகங்களை யெல்லாம் மூடிவிடுங்கள். கார்த்திகை உத்ஸவம் செய்ய வேண்டு மென்றாலும் செய்யுங்கள். ஆடுதல் பாடுதல் இவைதாம் நமக்கு வேண்டியவை. இதில் இருக்கும் உயர்ச்சி புத்தகங்களில் கிடையா. திரு. S P. வீரப்பா அவர்கள் இங்கு நடந்த பல காட்சியின் சிறப்புக்குக் காரணஸ்தர் என்றறிந்து சந்தோஷிக்கிறேன். இப்பொழுது கிருஷ்ண லீலா நடித்துக்காட்டப் பெற்றது. அதைப் பார்த்த பொழுது நாம் இந்த உலகினின்று வேறெங்கோ சென்றுவிட்டோம். சங்கீதம் மிக உயர்ந்த நுண்கலையாகும். இசையின் மூலம் கடவுளையறிய முடியுமென்கின்ருர் கம்பர். இப்பொழுது நாம் படிக்கும் சயன்ஸ், சரித்திரம் முதலியவை போலியானவை. உண்மையான ஸயன்ஸ் நமது கலாசாலைகளிற் கற்பிக்கப் பெறவில்லை. இதைப் பி.ஸி. ராய் அவர்களே பலமுறை அறிவித்திருக்கிருர்கள். ஆனுல் கலைகள் நமது நாட்டில் அழிந்துபோய்விட்டன. ஏதேனும் கலை வேண்டுமானுல் ஆயிரம் ஆண்டுகட்கு முன்பே செல்லவேண்டியதாக இருக்கிறது. பழைய கலையைத் தவிரப் புதுக்கலை ஒன்றும் இங்கு கிடையாது. கோயில் கட்டுவது சிறந்த கலையாக நமது நாட்டில் கொள்ளப்பட்டிருந்தது. அவற்றின் அழகைப் புகழாத ஆங்கிலேயரும் இல்லை. சில பழங்கோயில்களில் தொப்பியணிந்த காவல்காரர்களின் சிலை நிர்மாணிக்கப்பட்டிருப்பதைக் கண்டு சிற்பம் நம்மைச் சேர்ந்தவையல்லவென்றும், அவை மேல் நாட்டினரிடமிருந்தே கற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறதென்றும் கூறுகின்றனர். இது தவறு. டச்சுக்காரர்கள் சிலர் நமது நாட்டில் அப்பொழுது நெருங்கிய சம்பந்தம் வைத்துக்கொண்டிருந்தனர். அதன் குறியே அச்சிலையென்று கருதக்கூடும்.

சங்கீதத்தில் நாம் தான் உலகிலேயே உச்சநிலையிலிருக்கின்ருேம். ஜர்மனியில் சமீபத்தில்தான் இரண்டு மூன்று ராகங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இதைக் கண்டே அவர்கள் அடைந்த மகிழ்ச்சிக்களவில்லை. நாம் 1000 வருஷங்களுக்கு முன்பே நூற்றுக்கணக்கான ராகங்களை அறிந்திருக்கிருேம். உண்மையான சங்கீதம் மிகுந்த பாவமுடையது. பல சங்கீத வித்வான்களுக்குப் பாவமே தெரிவதில்லை. நடனக்கலை நம்மைவிட்டு அழிந்துபோய்விட்டது. ஸ்ரீமதி முத்துலெக்ஷிமி ரெட்டி கண்ணீர் வடித்ததன் காரணமாக நாங்கள் அன்று சட்டசபையில் ஓட்டளித்தோம். இருந்தாலும் அந்த நடனக்கலை இப்பொழுது தழைக்க ஆரம்பித்துவிட்டது. குடும்ப ஸ்திரீகளும் அதைக்கற்க ஆரம்பித்துவிட்டனர்.

தமிழ்மொழிக்கு நிகரான பாஷை உலகத்தில் கிடையாதென்பது எனது கருத்து. பாவம் வெளிப்படப் பேசும் இயல்பு தமிழுக்குத் தனித்து அமைந்திருக்கிறது. கேள்வி கேட்கும் முறை தமிழர்க்கு வாய்த்தமாதிரி வேறு யாருக்கும் வாய்க்கவில்லை. ஆங்கிலத்தில் "நீ உன் தகப்பனுருக்கு எத்தனுவது பிள்ளை" யென்று கேட்பது சாத்தியமில்லை. "போயே போய் விட்டான்" என்பதை உணர்ச்சிப் பொதுளும்படி ஆங்கிலத்தில் கூறுவது கடினம். கிரீக் வசனத்தைவிட தமிழ் வசனம் மிகச் சிறப்புவாய்ந்ததென்பதில் சந்தேகமே கிடையாது. காவியத்திலோ அதாவது கவிமுறையிலோ என்ருல் சொல்லவே வேண்டியதில்லை. கம்பன் கவிக்கு இணை இந்த உலகில் ஒன்றுமே இல்லையென்று நான் நிச்சயமாகக் கூறுவேன். என்று கூறி தலைவர் திரு. டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்கள் கம்பன் கவிகள் சிலவற்றின் நயங்களை மிகத்திறமாக எடுத்துக் காட்டிச் சபையோரை மகிழ்வித்தார்கள்.

பின்னர் வந்திருந்த வாழ்த்துச்செய்திகள் படிக்கப்பெற்றன. பர்மா வாழும் புதுவயல் இளைஞர்களால் சாஸ்வதி சங்கத்திற்காக அனுப்பப்பெற்ற வெள்ளிக்கோப்பையைத் தலைவர் அவர்கள் வழங்கினார்கள். சங்கத் தலைவர் வீர. பழ. வினைதீர்த்தான் செட்டியாரவர்களால் யாவருக்கும் நன்றிகூறப்பெற்று வாழ்த்துப் பாக்களுடன் விழா இனிது நிறைவெய்தியது

இரவு யாவருக்கும் உணவளிக்கப்பெற்றது.







## 2 லட்சம் தொழிலாளர் வேலை நிறுத்தம்

### பிரான்ஸில் நெருக்கடி

பிரான்ஸில் 2½ லட்சம் சுரங்கத் தொழிலாளர்கள் மே 1-ந் தேதியிலிருந்து பொது வேலை நிறுத்தம் செய்வதெனத் தீர்மானித்துவிட்டனர். சம்பளக் குறைப்பே அதற்குக் காரணம். முதலாளிகள் வெளிநாட்டிலிருந்து இறக்குமதியாகும் நிலக்கரியின் அளவைக் கட்டுப்படுத்தினுல் சம்பளத்தை உயர்த்தத் தயாராக இருப்பதாகக் கூறுகிருர்கள்.

### ஹைக்கோர்ட்டு விடுமுறை

வருகிற மே மாதம் 8-ந்தேதி முதற்கொண்டு ஜூலை மாதம் 8-ந்தேதி வரையில் கோடையை உத்தேசித்து சென்னை ஹைக்கோர்ட்டு மூடப்படும். ஜஸ்டிஸ் மாக்கெட்டும் 'ஜஸ்டிஸ் பர்னும் விடுமுறை ஜட்ஜுகளாவர். பிரதி வாரமும் செவ்வாய்க்கிழமையன்று அவசர மனுக்களை நீதிபதிகள் விசாரணைக்கு எடுத்துக்கொள்வார்கள். ஜஸ்டிஸ் பர்ன் கிரிமினல் வழக்குகளையும், ஜஸ்டிஸ் மாக்கெட் ஸிவில் வழக்குகளையும் விசாரணை செய்வார்.

### கல்கத்தாவில் மோட்டார் தொழிற்சாலை

புதிதாக நிறுவப்படும்

மோட்டார்களைப் பெருவாரியாக உற்பத்தி செய்வதற்கான ஒரு தொழிற்சாலை ஒரு கோடி ரூபா மூலதனத்துடன் கல்கத்தாவில் நிறுவப்படுமென்று தெரிகிறது. கல்கத்தா நகருக்கருகில் தொழிற்சாலை அமைக்கப்படும். அமெரிக்காவில் போர்ட் தொழிற்சாலையில் மிகுந்த அநுபவம் பெற்ற இந்தியர் இதை நிர்வகிப்பார்.

## தீண்டப்படாதாருக்கு நெய்த்தடை

### ஜெயபுரி அட்டூழியம்

ஜெயபுரி சமஸ்தானம் சக்வாரா என்ற கிராமத்தில் தீண்டப்படாத வகுப்பினர் தங்கள் உணவில் நெய் சேர்த்து உண்ணக்கூடாதென்று சமீபத்தில் 150 ஜாதி இந்துக்கள் தடிகளை யேந்தி பெருங் கலகம் செய்தனர். தீண்டப்படாதார் கங்காநதி க்ஷேத்திர யாத்திரை சம்பந்தமாக ஒரு பெரிய ஜாதீய விருந்து செய்ய நெய் சேர்த்து சமையல் பண்ண உத்தேசித்ததே அவர்கள் செய்த குற்றம். பஞ்சமர்கள் தங்களுடைய உணவில் நெய் கலந்து சமைக்கக்கூடாதென ஜாதி இந்துக்கள் தடுத்து நடு இரவில் அங்கு தோன்றிக் கலகஞ் செய்தனர்.

பஞ்சமர்கள் தங்களுடைய மத சம்பந்தமான அந்த விசேஷ காரியத்திற்கு மட்டும் நெய் சேகரித்துக்கொள்ள அதிகாரிகளின் அனுமதி பெற்றிருந்ததாகவும் சொல்லிக்கொண்டார்கள். அப்படியிருந்தும் ஜாதி இந்துக்கள் தீண்டப்படாதார் நெய் உபயோகிப்பதைப் பலாத்காரமாய்த் தடுத்தனர். நெய் கலந்த உணவுகளையும் மற்ற ஆகாரப் பொருள்களையும் ஜாதி இந்துக்கள் நாசமாக்கினர். தீண்டப்படாதாரில் அநேகரை அவர்கள் நையப் புடைத்து ஹிம்சை செய்தார்கள் என்று சொல்லப்படுகிறது. விருந்து நடைபெருமல் நின்றுவிட்டது. விருந்துக்காக வெகுதூரங்களிலிருந்து வந்திருந்த பஞ்சமர்கள் ஏமாந்துபோயினர்.

ஜெயபுரி போலீசுக்குத் தகவல் கொடுக்கப்பட்டிருக்கிறது.

ஜர்மனி தேசம் ஆஸ்டிரியாவைப் பிடித்துக்கொள்ளவேண்டுமென்ற ஆசையோடு முயற்சி செய்வதாகத் தெரிகிறது.

## பால்ய விவாகத் தடை மசோதா

### திருவாங்கூர் சட்டசபையில் கொண்டுவரப்பட்டது

ஏப்ரல் 20உ யன்று திருவாங்கூர் சட்டசபையில் ஸ்ரீமதி நாராயணி யம்மாள் பால்ய விவாகத்தைத் தடுப்பதற்காகக் கொண்டுவந்த மசோதாவின் கொள்கையை திருவாங்கூர் ஜனப்பிரதிநிதி சபை ஏற்றுக்கொண்டது. இதைக் கொண்டுவர பாதகமாக 4 பேரே ஓட்டளித்தனர். 4 மாதங்களில் ரிப்போர்ட் அனுப்பவேண்டுமென்று நிபந்தனையுடன் பொறுக்குக் கமிட்டியின் பரிசிலனைக்கு அனுப்பப் பட்டது.

திருவாங்கூர் சட்டசபையில் ஒரு ஸ்திரீ மெம்பர் மசோதாக் கொண்டு வருவதற்கு இதுதான் முதல் தடவையாகும்.

இதன் நோக்கத்தைப் பற்றி அறிக்கை கூறுவதாவது:—

திருவாங்கூரில் பால்ய விவாகம் பெரிய பிரச்னையாக இல்லாவிட்டாலும் சிற்சில சமூகங்களில் பால்ய விவாகங்கள் நடைபெறுகின்றன. இச்சிசு விவாகங்களைத் தடுப்பது இதன் நோக்கம். சாரதாச் சட்டத்தை ஆதாரமாகக் கொண்டு இது தயாரிக்கப்பட்டிருக்கிறது. சாரதா சட்டம் 14 வயதிற்குட்பட்ட பெண்ணுக்கு விவாகம் செய்யக் கூடாதெனத் தடுக்கிறது. இம் மசோதா 15 வயதிற்குக் கீழ்ப்பட்ட பெண்களுக்கு விவாகம் செய்யக் கூடாதெனத் தடுக்கிறது. ஆனுல் பெண்ணின் பெற்ருேர்களில் எவரேனும் விசேஷ காரணங்களை முன்னிட்டு தமது ஆயுட் காலத்திலேயே விவாகம் செய்துவைக்க விரும்பினுல் பெண்ணுக்கு 13 வயதுக்கு மேற்பட்டு ஆகியிருந்தால் ஜில்லா மாஜிஸ்திரேட்டின் அனுமதி பெற்று விவாகத்தை நடத்தலாம். ஆனுல் 15 வயதான பிறகே ருதுசாந்தி நடத்தவேண்டும். சாரதா சட்டத்தின்படி ஒரு வருஷத்திற்குள் புகார் செய்யவேண்டும். இம்மசோதா 6 மாதத்திற்குள் புகார் செய்யவேண்டுமென்று கூறுகிறது.

## பஞ்சமர்-பிராமணர் கலப்பு மணம்

பஞ்சமர் வகுப்புப் பெண்ணுன ஸ்ரீமதி லீலாவதிக்கும் வைணவப் பிராமண வகுப்பைச்சேர்ந்த கஸ்தூரி ராமானுஜாசாரிக்கும் சமீபத்தில் குண்டூரில் கலப்புமணம் நடைபெற்றது. தம்பதிகளை ஆதி ஆந்திரர்கள் ஊர்வலமாக அழைத்துச்சென்றனர்.

### மரண ஒப்பந்தம்

காதலர் இறந்தனர்

காகபுரி ஏப்ரல் 19.

அம்பஜேரி இயந்திர சாலையில் வேலை பார்க்கும் முன்ஷிலால் என்பவரும் அவரது ஊழியரின் மனைவியான அனந்தம்மாள் என்பவரும் அவளுக்கு ஏற்கனவே இரண்டு குழந்தைகள் இருந்தபோதிலும் ஒருவரை யொருவர் நேசித்து வந்தனர். ஆனுல் அவர்கள் இவ்வுலகில் மன நிம்மதியாக வாழ முடியாதென்பதைக் கண்டு கொண்டனர். ஆகவே அவர்கள் ஒரு மரண ஒப்பந்தம் செய்து கொண்டு புடவையையும் வஸ்திரத்தையும் ஒருவருக்கொருவர் முடிந்து கொண்டு இருவரும் இறுகத் தழுவியவர்களாய் அம்பஜேரி குளத்தில் குதித்து மூழ்கினர். பண்ணில் புதைந்து கிடந்த அவரது உடல்கள் பிறகு கண்டு பிடிக்கப்பட்டன. அவர்கள் விடுத்துப் போன கடிதத்தால் அவர்களது மரண மர்மம் வெளியாயிற்று.

# அச்சு வேலைகளுக்கு

## அழகே பிரதானம்.

## இந்த அழகை

திறமையான தொழிலாளர், விலையுயர்ந்த சாமான்கள்,
ஏராளமான கருவிகள் ஆகியவைகளால்தான்
அடைய முடியும்.

# காரைக்குடி குமரன் பவர் பிரஸ்

அழகிய அச்சுவேலைகளுக்குப் புகழ்பெற்ற இடம்.

**உடனே உங்கள் வேலைகளை அனுப்பி லாபம் அடையுங்கள்.**

கண் கவர் வனப்பு நிறைந்த சீமைக் கார்டுகள் வந்திருக்கின்றன.
ஏர் மெயில் காகிதம், கவர், புதுமாதிரியான லெட்டர்பேடுகள் பிரமிக்கத் தக்கதாகும்.

**ஒருமுறை விஜயம் செய்யுங்கள்.**

மானேஜர், "குமரன்" காரைக்குடி.

## விற்பனைப் புத்தகங்கள்.

| | |
|---|---|
| குமரன் சித்திர மலர் I | 0—2—0 |
| ஷை II | 0—2—0 |
| மௌன தேசிகர் | 0—6—0 |
| சுதந்திரப்போர் or உப்பள முற்றுகை | 0—4—0 |
| சிதம்பர ரகசியம் | 0—8—0 |
| காந்தி பிள்ளைத்தமிழ் | 0—8—0 |
| வேதாந்த தத்துவம் | 0—6—0 |
| சபேசன் அல்லது சுதந்திர ரக்ஷகன் | 0—6—0 |
| நிஷ்டா காலத்திற்கண்ட அற்புதக் காட்சிகள் | 1—0—0 |
| அஷ்டவிம்சதித் தோத்திரப் பிரபந்தம் | 0—6—0 |
| தனித்தமிழ்ப் பாக்கள் | 0—6—0 |
| மனம்போல வாழ்வு | 0—8—0 |
| இந்தியாவின் சுதந்திரப் போர் | 0—5—0 |
| சந்திரகுப்த சக்கரவர்த்தி சரித்திரம் | 0—6—0 |
| வள்ளியம்மை சரித்திரம் | 0—8—0 |
| டாகூர் சிறு கதைகள் | |
| ,, நான்காம் தொகுதி | 0-12—0 |
| தேவோ பாசனு தீபம் | 0—8—0 |
| காந்தி புராணம் (மூன்றாம் காண்டம்) | 0-12—0 |
| திராமியோஜூலியத் | 0—8—0 |
| ரேக்குறள் மணக்குட வருரை | 1—0—0 |
| வால்மீகி விஜயம் | 1—0—0 |
| மேனசா | 1—8—0 |
| யுகசந்தி | 0—4—0 |
| புதல்வர் கடமை | 0-12—0 |
| இகபரஞான சாகரத்திரட்டு | 0—8—0 |
| 708 திருப்பதி திருப்புகழ் | 0—6—0 |
| நந்தனர் சரித்திரக் கீர்த்தனை | 0-11—0 |
| சாணக்ய சாகசம் அல்லது சந்திரகுப்த சரித்திரம் | 1—4—0 |
| ஷை இரண்டாம் பாகம் | 1—8—0 |
| கமலாவதி | 0-12—0 |
| நால்வர் சரித்திரம் | 0—8—0 |
| விஸ்வனுதன் | 0—8—0 |
| அறநூல் | 0—3—0 |
| தோத்திரக்கோவை | 0—6—0 |
| பக்த சந்திரிகா | 0—12-0 |
| பக்தியோகம் | 0—10-0 |
| இருநூறு சில்லரைக்கோவை | 3—0—0 |
| பெரியவிக்கிரமாதித்தன் கதை | 2—0—0 |
| ஸ்ரீமத் மகாபாகவத வசனம் | 5—0—0 |
| மனுமானிடக்கும்மி | 0—0—6 |
| குமரன் ஆண்டுமடல் பிரபவ | 1—0—0 |
| ,, விபவ | 1—0—0 |
| ,, சுக்கில | 1—0—0 |
| ஸ்ரீமுக வருஷ அனுபந்தம் | 0—4—0 |
| பவ வருஷ அனுபந்தம் | 0—4—0 |
| மகாத்மா காந்தியின் ஜீவிய சரித்திரமும் இந்தியாவும் | 0—2—0 |
| அரும்பொருள் திரட்டு | 1—4—0 |
| ஞானவாசிட்டம் முதல்பாகம் | 3—0—0 |
| இரண்டாம் பாகம் | 3—0—0 |
| நைடதம் | 4—0—0 |
| கர்மா | 0—4—0 |
| இங்கிலீஷ் தமிழ் ஸ்வபோதினி | 0—8—0 |
| Hindutva | 1—0—0 |
| Echoes From Andaman | 1—0—0 |
| நான்காம்பாட புத்தகம் கா. நமசிவாய முதலியார் | 0—6—0 |
| ஐந்தாம்பாட புத்தகம் | 0—7—0 |
| ஆறும்பாட புத்தகம் | 0—7—0 |
| சுவாமி விவேகானந்தரின் வர்த்தமான பாரதம் | 0-10—0 |
| தன்னம்பிக்கை | 0—8—0 |
| எனது குருநாதன் | 0—8—0 |

மேற்கண்ட புத்தகங்கட்கு சந்தாதாருக்கு ரூ. 1-க்கு 4 அணு கமிஷன் தள்ளிக் கொடுக்கப்படும்.

தபாற்கூலி வேறு.

**மானேஜர், 'குமரன்' ஆபீஸ், காரைக்குடி**

# ஓரியண்டல்

## கவர்ன்மெண்ட் செக்யூரிடி

## லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனி, லிமிடெட்.

1874-ம்-வரு ஸ்தாபிக்கப்பட்டது. தலைமை ஆபீஸ், பம்பாய்.

1934-ம்-வரு ரிப்போர்ட்டின் முக்யாம்சங்கள்.

| | | |
|---|---|---|
| எடுத்துக்கொள்ளப்பட்ட புதிய பாலிஸிகள் | ரூ. | 7,62,42,61 |
| வருஷ வருமானம் | ,, | 3,14,01,70 |
| அமுலிலிருக்கும் பாலிஸிகள் | ,, | 54,20,38,97 |
| பாலிஸிதாரர்களுக்கும் வார்ஸுகளுக்கும் செலுத்தப்பட்ட தொகை | ,, | 16,29,88,814 |
| விருத்தியான மொத்த தொகை | ,, | 15,53,88,843 |

இவ்வெண்கள் ஓரியண்டல் கம்பெனியின் உயர்ந்த ஸ்திதியையும் பொதுஜன அபிமானத்தையும் நன்கு விளக்குகின்றன.

விசேஷ அபிவிருத்தியும் பொதுஜன அபிமானமும் பெற்றிருக்கும் இந்த லைப் ஆபீஸில் உங்களுடைய

## ஆயுளை இன்ஷ்யூர் செய்ய

## தாமதிக்காதீர்கள்.

விவரங்களுக்கு:— ஸப்-பிராஞ்சு காரியதரிசி,
ஓரியண்டல் லைப் ஆபீஸ், 251, மேல மாசி வீதி, மதுரை.

அல்லது பிராஞ்சு காரியதரிசி,
ஓரியண்டல் லைப் ஆபீஸ், திருச்சினப்பள்ளி.

அல்லது கீழ்க்கண்ட கம்பெனியின் மற்ற ஆபீஸ்களுக்கு எழுதவும்.

| | | | | |
|---|---|---|---|---|
| ஆக்ரா | கல்கத்தா | ஜால்கான் | மாண்டலே | ராஞ்சி |
| ஆஜ்மீர் | கள்ளிக்கோட்டை | ஜல்பைகுரி | மர்க்காரா | ரங்கூன் |
| ஆமதாபாத் | கோயமுத்தூர் | ஜப்பல்பூர் | மொம்பாஸா | ராவல்பிண்டி |
| அலகாபாத் | கொளும்பு | கராச்சி | நாகபுரி | சிங்கப்பூர் |
| அம்பாலா | டக்கா | கோலாலம்பூர் | பாடலிபுரம் | சுக்கூர் |
| பெங்களூர் | டெல்லி | லாகூர் | பூனு | திருவனந்தபுரம் |
| பாரில்லி | கௌஹாத்தி | லக்ஷ்மணபுரி | ராய்பூர் | விசாகப் |
| பெல்லாரி | குண்டூர் | மதராஸ் | ராஜஷாஹி | பட்டணம் |

**நமது பலசரக்குக்கடை விலை அணு 10.**

Printed and Published by N. VEERAPPAN for Dhana Vysian Company Ltd, at the Kumaran Power Press, Karaikudi (S. INDIA.)

